REGISTERED No. M. 1669

# நவசக்தி

# NAVASAKTI

## (தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா ... | 6 | 0 |

| விளம்பர விகிதம். | | |
|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"வீடு பெறநில்" "மாற்ருனுக் கிடங்கொடேல்" "ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு ந ருத்ரோத்காரிஹு ஆவணிமீ அஉ (24—8—23) பரல் சந

# ஹைதர் அலி

தென்னாட்டவர் பலர்க்கும் தெரிந்துள்ள ஹைதர் அலியையைப்பற்றிச் சிலவழக்குரைகள் சர்ன பரம்பரையாகத் தென் தேசங்களில் வழங்கி வருகின்றன. இவைகள் எவ்வளவு தூரம் உண்மையென்பதை நாம் அறிய முடியாமற் போயினும், இவைகள் பலர்க்கும் தெரிந்திருப்பது நல்லதென்று எண்ணி, ஒரு பெரியார் எழுதியதை அநுசரித்து இதனை எழுதுகிறேன். ஹைதரைப்பற்றிய சரித்திரம் இதில் காணப்படாதாயினும், இவனைப்பற்றி அக்காலத்தில் எத்தகைய எண்ணம் இருந்தது என்பது இவ்வழக் குரைகளினுல் நன்கு புலனுகும்.

* * *

பதினெட்டாம் நூற்ருண்டு இறுதியில் தென்னிந்தியாவிலிருந்த ஒவ்வொரு குடி மன்னரையும் ஒவ்வொரு சேனுதிபதியையும் கலங்க வைத்தவன் யார்? உறுதியான உள்ளத்தைக் கொண்டிருந்தவன், எதிர்பாராத அதிருஷ்டத்தை யடைந்தவன் யார்? தனக்கெதிரே தோன்றிய எண்ணிலா இடையூறுகளை நீக்கிக் கொண்டு தன் காரியத்திலேயே கண்ணுயிருந்து அதனை நிறை வேற்றியவன் யார்? ஆங்கிலேயர்களோடு பலமுறை எதிர்த்து நின்றவன் யார்? எவனுடைய பெயரைக் கேட்டுத் தென்னிந்தியாவிலுள்ள ஜனங்கள் இன்னும் நடுங்கிக்கொண் டிருக்கிருர்கள்? ஹைதர்; ஹைதர் [illegible] அலி மைசூர் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு நிலையான ஓர் ஆட்சி முறையை வகுத்து ஆண்டுவந்த போதிலும் அவனுடைய வீரமும் அஞ்சாமையும் தெற்கே கன்னியா குமரி முனையிலிருந்தவர்க்கும் நடுக்கத்தைக் கொடுத்தன.

* * *

பதினேழாம் நூற்ருண்டு இறுதியில், பஞ்சாபைச் சேர்ந்த ஒரு முஸல்மான் பக்கிரிவேடம் பூண்டு இந்தியா முழுவதும் சுற்றி வந்து கடைசியில் மைசூரில் குடிபுகுந்தான். இவனுக்குப்பதி முகம்மது என்ற ஒரு குமாரன் இருந்தான். இவன், மைசூர் சேனையில் சிப்பாயாக அமர்ந்து, தன்னுடைய சாமர்த்தியத்தினுலும் வீரத்தினுலும் "நாயக்" என்ற உயர்பதவியடைந்தான். இந்த பதிமுகம்மது என்பவன் சகோதரிகளான இருவரை ஒருவர் பின் ஒருவராக மணஞ் செய்துகொண்டான். இவரில் இளையவளுக்கு ஷாபாஸ் என்றும் ஹைதர் என்றும் இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள். சிறிது காலம் கழித்து, பதிமுகம்மது ஒரு சிறு சண்டையில் இறந்துபோனுன். அப்பொழுது ஷாபாஸுக்கு வயது ஒன்பது; ஹைதருக்கு வயது ஏழு. தகப்பனையிழந்த இப்பிள்ளைகளை, இவர்களுடைய தாயாரின் சகோதரனுன இப்ராஹீம் என்பவன் வளர்த்து வந்தான். ஹைதர் இளமையில் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளவில்லை. இவன் பிற்காலத்தில் ஒரு பெரிய அரசனுக விளங்குவான் என்று எவரும் அப்பொழுது கருதவில்லை. ஹைதர் தன் காலத்தைச் சச்சரவுகள் செய்வதில் கழித்தான். ஹைதரின் சகோதரனுன ஷாபாஸ் என்பவன், அப்பொழுது மைசூர் அரசனுயிருந்த நஞ்சராஜனுடைய சேனையில் புகழுடன் விளங்கினுன். ஹைதர், தன்னுடைய இருபத்தேழாவது வயதுவரை, தன் பிற்கால வாழ்க்கையின் மேன்மைக்கு அறிகுறியான காரியங்கள் எதையும் பிரபலமாகச் செய்யவில்லை. ஆனுல் இவனுடைய தைரியத்தையும், ஆபத்துக்காலங்களில் காட்டிய மனவமைதியையும் தன் காரியத்தில் கண்ணுயிருந்து பிற இடையூறுகளைக் கவனியாத குணத்தையும் கண்டு இவனுடன் பழகினவர்கள் வியந்து பாராட்டி வந்தார்கள் என்பதில் ஐயமில்லை. சேனையில் சேரும்படி அவன் பலரால் பலவிதமாகத் தூண்டப்பட்டான். கடைசியில் ஹைதர் தேவனஹள்ளியில் முற்றுகையிட்டுக்கொண்டிருந்த தன் சகோதரன் சேனையில் சேர்ந்துகொண்டான்! இந்தச் சேனையில் சேர்ந்ததும் இவனிடத்தில் ஒரு யுத்தவீரனுக்கு வேண்டப்படும் அரிய குணங்கள் திகழ்ந்தனவென்றும், இக்குணங்களை இவன் யுத்தகளத்தில் யாவரும் பிரமிக்கும்வண்ணம் உபயோகித்தான் என்றும் சொல்லப்படுகின்றன. தேவனஹள்ளி முற்றுகை ஒன்பதுமாதகாலம் நடைபெற்றது. இக்காலத்தில், ஹைதர் காட்டிய வீரத்திற்காக இவன் ஒரு சிறு சேனையின் தலைவனுக நியமிக்கப்பட்டான். இங்ஙனம் நியமிக்கப்பட்டதோடு, தனக்குச் சக்தியுண்டானுல் இன்னும் அதிகமான பேரைத் தன் சேனையில் சேர்த்துக்கொள்ளலாம் என்று இவன் கட்டளையிடப்பட்டான். இச்சமயத்தில் நஞ்சராஜன் பிரேஞ்சுக்காரரோடு சேர்ந்துகொண்டு திரிசிராப்பள்ளி மீது படையெடுத்துச் சென்ருன். இந்தப் படையுடன் ஹைதரும் சென்ருன். இந்தப் படையெடுப்பில்தான் ஹைதரின் பிற்காலப் பெருமைக்கு அஸ்திவாரம் போடப்பட்டது என்று கூறலாம். ஹைதரின் கீழ் சிப்பாய்களாக அமர்ந்தவர்கள் மாதச் சம்பளம் பெறவில்லை. கொள்ளைக் கூட்டங்களினின்று அவ்வப்பொழுது பொறுக்கி யெடுக்கப்பட்டவர்களே ஹைதரின் சேனையில் சேர்ந்து கொண்டார்களென்றும், இவர்கள் மாதச் சம்பளம் பெற விரும்பவில்லையென்றும், தாங்கள் கொள்ளையடிப்பதில் தத்தமக்குரிய பங்கையே பெறவிரும்பினுர்களென்றும் சொல்லப்படுகின்றன. இத்தகையவர்களையே இவன் யுத்த வீரர்களாகப் பழக்கினுன். இவர்களுடைய உதவியாலேயே இவன் பிற்காலத்தில், மைசூர் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு, அதனை நீடித்த ஓர் அரசாங்கமாகச் செய்தான் என்று கூற வேண்டும். இவ்விஷயத்தில் ஹைதருக்கும் சிவாஜிக்கும் அதிக வேற்றுமை இல்லை.

* * *

மேற் கூறப்பட்ட படையெடுப்பு நடைபெற்றபோது, திரிசிராப்பள்ளியைச் சுற்றி அநேக மைல்கள் வரை, ஹைதருடைய ஆட்களின் ஆதிக்கமே அதிகமாயிருந்ததாகச் சொல்லப்படுகிறது. வழிப்பறிக் கொள்ளையும் கூட்டக்கொள்ளையும் இவர்களால் நடைபெற்றன வென்று சொல்லப்படுகிறது. இப்பொழுதும் இது சம்பந்தமாகக் கிராம வாசிகள் அநேக கதைகள் சொல்வார்கள். தனியாகச் செல்பவரின் மூட்டை முடிச்சுகளும், ஸ்திரீகளின் சிறு நகையும் அப்பொழுது பத்திரமாயிராதாம். ஹைதரின் ஆட்கள் கிராமம் கிராமமாகச் சென்று கொள்ளையடித்தார்கள் என்று சொல்லப்படுகிறது. இங்ஙனம் கொள்ளையடிக்கச் சென்ற ஒரு சமயத்தில் தான், இப்பொழுது வழங்கிவரும் ஹைதருடைய கதைக்குக் காரணமான சம்பவங்கள் நிகழ்ந்தன போலும்.

* * *

கோடைகாலம், சூரியன் தன் அதிகாரத்தை மும்முரமாகச் செலுத்திக் கொண்டிருந்தான். ஹைதர், அதிக தொலை தூரம் சென்றுவந்த களைப்பினுல் திரிசிராப்பள்ளிக் கருகாமையில் ஒரு பெரிய ஆலமரத்தினடியில் படுத்துக்கொண்டான். அதிக சிரமப்பட்டு வந்தவனுதலால் படுத்தவுடன் அயர்ந்து நித்திரை போய்விட்டான். சிறிது நேரங் கழித்து, ஹைதர் முகத்தின் மீது சூரிய உஷ்ணம் நேராகத் தாக்கியது. இலைகளின் நிழலில் இதுகாறும் மறைபட்டிருந்த சூரிய கிரணங்கள் இப்பொழுது ஹைதர் முகத்துக்கு நேரேவந்து தாக்கின. இச்சமயத்தில், அதேதாற்போலிருந்த ஒருபுற்றிலிருந்து ஒரு சர்ப்பம் கிளம்பி வந்து ஹைதரின் முகத்துக்கு நேரே சூரிய உஷ்ணம் படாமல் தன் படத்தை நன்கு விரித்து நின்றது. இந்நாகம் தன் தேகத்தை சுருட்டி ஒருபுறமாக வைத்துக் கொண்டு தன் படத்தைமாத்திரம் ஹைதரின் முகத்துக்கு நேரே விரித்து ஒரு குடைபோல் விளங்கியது. சூரிய உஷ்ணமும் தன் மீது படாதிருந்தமையால், ஹைதர் ஆழ்ந்த நித்திரை செய்தான். சர்ப்பமோ சிறிதும் தளர்ச்சியுருது அவன்மீது வெயில்படாது காத்து வந்தது. இச்சமயத்தில் அவ்வழியாக ஒரு பிராமணன் சென்ருன். அவன் இந்த ஆச்சரியத்தைக் கண்ணுற்ருன். ஒருவன் தூங்கிக்கொண்டிருக்கும்போது சர்ப்பங்கள் அவன்மீது படம் விரித்து நின்ருல், அவன் பிற்காலத்தில் சக்கரவர்த்தியாவான் என்று இந்திய நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. இந்த உண்மை அந்த அந்தணனுக்குத் தெரியும். சிறிதுநேரம் அந்த இடத்திலேயே நின்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். ஹைதருடைய முகத்தில் க்ஷத்திரிய தேசு விளங்குவதைக் கண்ணுற்ருன். இவன் பிற்காலத்தில் ஒரு பெரிய அரசனுக வருவான் என்று பட்டுவிட்டது. அரசனின் அவனிடத்திலிருந்து ஏதேனும் ஒரு நன்மை பெற்றுக் கொண்டு போகவேண்டுமென்று அந்தப் பிராமணன் தீர்மானித்துவிட்டான். அங்கேயே சிறிது நேரம் இருந்தான். பிறகு ஹைதர் தூக்கத்தினின்று விழித்துக் கொண்டான். சர்ப்பமானது எஜமானனது வருகையைக் கண்டு அடங்கி உள்ளே செல்லும் ஏவலாளனைப்போல் தன் படத்தைச் சுருக்கிக் கொண்டு புற்றுக்குள் போய்விட்டது. தூரநின்று கொண்டிருந்த பிராமணன், ஹைதரின் அருகில் வந்து வணங்கி நின்ருன். ஒரு பிராமணன், ஒரு முஸல்மானை வணங்கி நிற்பதைக் கண்டு ஹைதர் ஆச்சரியமடைந்து 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டான். பிராமணன் "பிரபுவே! நீ ஒருநாள் அரசனுகவரப்போகிருய். அப்பொழுது இந்த ஏழைப்பிராமணனைப் பார்த்துக் கொள்ளவேண்டும்." என்ருன். "நான் ஓர் அரசனுக ஆவேனு" என்று ஹைதர் ஆவலுடனும் ஆச்சரியத்துடனும் கேட்டான். "ஆம்; இதில் சந்தேகமில்லை. நீ அரசனுனல் எனக்கு என்னசெய்வாய்?" என்று அந்தணன் கேட்டான். ஹைதரும் வேடிக்கையாக—நமக்கு அரசபதவி கிடைக்கப் போகிறதா என்ற எண்ணத்துடனே என்னவோ—"நான் அரசனுனல் உன்னை என் பிரதமமந்திரி யாக்கிக்கொள்வேன்" என்ருன். பிராமணனும் வேண்டிய ஆசீர்வாதங்களைச் செய்துவிட்டுச் சென்ருன். ஹைதரும், அது முதல் தான் அரசனுவதெப்படி என்று ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

* * *

சில ஆண்டுகள் கழிந்தன. ஹைதர் மைசூர் சிம்மாசனுதிபதி யாகிவிட்டான். இவன் அரசனுனதும், இவன் கீழிருந்த சில மந்திரிமார்கள் இவனுக்கு விரோதமாகச் சூழ்ச்சி செய்யவே, அவர்களை நீக்கிவிட்டு, இவன் சிறந்த ஒரு பிராமண இராஜ தந்திரி தனக்கு உதவியாக வேண்டுமென்று தேடிக் கொண்டிருந்தான். ஹைதரின் அபிவிருத்தியை கவனித்துக்கொண்டிருந்த முற் கூறப்பட்ட பிராமணன் அச்சமயத்தில் ஹைதர் முன் தோன்றினுன். ஹைதரின் வாக்குறுதியை ஞாபகப்படுத்தினுன். உடனே ஹைதர் அவனைத் தன் பிரதம மந்திரியாக்கினுன். இவன் சிறந்த இராஜ தந்திரியாகவும் பெரிய நிபுணனுகவும் விளங்கினுன். இவனே புகழ்பெற்ற பூர்ணய்யா. பூர்ணய்யா, ஹைதருக்கும் திப்புவுக்கும் உற்ற துணைவராகவும் சிறந்த மந்திரியாகவும் விளங்கினுர். பூர்ணயருடைய உருவச்சிலை இப்பொழுதும் சென்னை ஜார்ஜ் கோட்டையில் இருக்கிறது. சென்னையிலுள்ள கார்ன்வாலிஸ் உருவச் சிலையின் கீழும், திப்புவின் இரண்டு குமாரர்களை கவர்னர் ஜெனரலுக்குக் கொடுக்கும் பான்மைபோல் இவர் உருவம் தீட்டப்பட்டிருக்கிறது.

* * *

இது தவிர மற்ருெரு கதையும் தென்னுட்டில் வழங்கிவருகிறது. ஹைதர், தன் இராஜ்யத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டுவிட்டான். இவனுடைய பெயரைக் கேட்டுத் தென்னுடு முழுவதும் நடுங்கியது. இவனுடைய செல்வாக்கு, அதிகாரம் முதலியன இங்கிலீஷ்காரர் ஒருவர்க்குமட்டும் சிறிது கீழடங்கி நின்றன. இதை ஹைதர் ஒரு பெரிய கௌரவக் குறைவாக எண்ணி, தென்னுடு முழுவதையும் சூறையாடி அனைவரையும் அச்சுறுத்துவதேன்று தீர்மானித்தான். பல ஊர்களையும் கோயில்களையும் இக்காலத்தில் நாசப்படுத்தினுன் என்று சொல்லப்படுகிறது. ஹைதர் ஸ்ரீரங்கத்துக் கோயிலில் ஏராளமான பொருள் இருப்பதாக அறிந்துகொண்டு அதனைக் கொள்ளையடிப்பதென்று தீர்மானித்துப் படையெடுத்துச் சென்ருன். இப்பொழுது திரிசிராப்பள்ளிக்குப் பத்துமைல் தூரத்திலுள்ள சமயபுரம் என்ற கிராமத்தில் தன் படை வீட்டை அமைத்துக்கொண்டான். இதனைக் கண்டு ஸ்ரீரங்கத்துக் கோயிலதிகாரிகள் நடுக்கங்கொண்டார்கள். தங்களையும் தங்கள் கோயிலையும் காத்துக்கொள்வதற்காக ஒரு கதை கட்டிவிட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. அக்கதை கீழ் குறிக்கப்பட்டிருக்கிறது.

* * *

"முன்னொரு காலத்தில் தில்லியில் ஒரு பாதுஷா ஆண்டு கொண்டிருந்தார். அவர் நாட்டிலுள்ள எல்லா விக்ரகங்களையும் தம் அரண்மனையின் ஒரு பாகத்தில் சேர்த்து வைக்கவேண்டுமென்று ஒரு கட்டளை பிறப்பித்தார். இங்ஙனமே எல்லா விக்ரகங்களும் ஒன்று சேர்க்கப்பட்டன. சில காலம் கழித்து அந்தப்பாதுஷா இறந்துபோனுர். அவருடைய குமாரர் பட்டத்திற்கு வந்தார். இவருடைய குமாரத்தி ஒருத்தி, குவிக்கப்பட்ட விக்ரகங்களினின்று ஒன்றைப் பொறுக்கித் தன் விளையாட்டுக் கருவியாக உபயோகித்துக் கொண்டாள். இந்த விக்ரகம், சில காலங்களில் மனித உருக்கொண்டு இந்தப் பெண் குழந்தையுடன் விளையாடி வந்தது. இதனுல் இந்தக் குழந்தைக்கு அந்த விக்ரகத்தின் மீது அதிக பிரேமை ஏற்பட்டுவிட்டது. இஃதிப்படியிருக்கையில் ஸ்ரீ ரங்கத்திலிருந்தவர்கள், தங்களுக்கென்று ஒரு கடவுள் இல்லாமையால் மனத்துயரங்கொண்டு பல விக்ரகங்களைச் செய்தார்கள். ஆனுல் ஒரு விக்ரகத்திலாவது பழைய விக்ரகத்தின் மூர்த்திகரம் இல்லை. எனவே அந்தப் பழைய விக்ரகத்தைக் கொண்டுவர முயற்சிசெய்து சிலர் சேர்ந்து தில்லிக்குச் சென்று தங்களுடைய விக்ரகத்தைக் கொடுக்கும்படி பாதுஷாவை வேண்டினுர்கள். பாதுஷா, அவர்களுடைய விக்ரகத்தை எடுத்துக்கொடுக்கும்படி உத்தரவிட்டான். ஸ்ரீ ரங்கத்திலிருந்து சென்றவர்கள், தங்களுடைய விக்ரகம் அரசகுமாரியின் கையில் இருப்பதை அறிந்து அதைக் கொடுக்கும்படி வேண்டினுர்கள். அரசகுமாரி மறுத்தாள். முதலில் பாதுஷா முடியாதென்று கூறினுர். பிறகு அரசகுமாரியின் கையிலிருந்து அந்த விக்ரகத்தைப் பிடுங்கிக் கொடுத்துவிட்டார். உடனே அது ஸ்ரீ ரங்கத்தில் பழைய இடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஆனுல் அரசகுமாரி, தனக்கு அந்த விக்ரகமே வேண்டுமென்று பிடிவாதமாயிருந்தாள். மறுபடியும் பாதுஷா, அந்த விக்ரகத்தைக் கொண்டு வரும்படி ஆட்களை அனுப்பினுர். ஸ்ரீரங்கத்திலிருந்தவர்கள், தங்களுடைய விக்ரகத்தைத் தவிர, அதைப்போல வேறு விக்ரங்களை வார்த்து அனுப்பினுர்கள். ஆனுல் அரசகுமாரி இவைகளையெல்லாம் மறுத்து விட்டாள். கடைசியில் தானே சென்று தன் விக்ரகத்தை எடுத்துக் கொண்டு வருவதாக அரசகுமாரி புறப்பட்டாள். புறப்பட்டு ஸ்ரீரங்கத்துக்கு வந்து கோயிலுக்குள் நுழைந்தாள். நுழைந்ததும் அவள் காணப்படவில்லை. அவள் சுவாமியுடன் ஐக்கியப்பட்டுவிட்டாள். (இந்தக் கதை எவ்வளவு தூரம் உண்மையோ தெரியாது. ஆனுல் இப்பொழுது ஸ்ரீரங்கம் கோயிலில் துலுக்க நாச்சியார் என்ற ஓர் அம்மனுக்கு தினம் ரொட்டியும் வெண்ணெயும் நைவேத்தியம் செய்யப்படுகின்றன. இது சம்பந்தமாக இப்பொழுதும் பங்குனி மாதத்தில் மட்டை அடி என்ற ஓர் உற்சவமும் நடைபெறுகிறது.)

* * *

இந்தக் கதையை, ஸ்ரீரங்கத்திலுள்ளவர்கள் ஹைதருக்குச் சொல்லி, ஹைதர் ஸ்ரீரங்கநாதருக்கு மாமனுராக வேண்டுமென்றும், மாமனுருக்கு மாப்பிள்ளை மரியாதை செய்ய வேண்டியது அவசியமாதலாலும், சில மரியாதைகளைக் கொண்டு வந்திருப்பதாகவும் தெரிவித்தார்கள். ஹைதர் இதனை ஏற்றுக்கொண்டு மாமனுர் என்ற முறையில் சில இரத்தின பரணங்களை அரங்கநாதப் பெருமானுக்கு அளித்தான். தவிரவும், ஸ்ரீரங்கம் கோயிலைத்தான் இனி எப்பொழு

தும் கொள்ளையடிப்பதில்லை மென்றும் வாக்குறுதி கொடுத்தான்.

• • • •

ஹைதரைப்பற்றி மற்றொரு கதை வழங்குவதுண்டு. ஹைதர், ஸ்ரீரங்கத்தினருகில் முகாம் செய்து கொண்டிருந்தபோது அவனுடைய படைவீட்டின் வழியாக் ஒரு தயிர்க்காரி தயிர் விற்றுக்கொண்டு சென்றாள். ஹைதர் படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய் அவளைத் தன்புறத்தி அவள் தயிர் முழுவதையும் குடித்துவிட்டான். கிழவியான அந்தத் தயிர்க்காரி உரக்க அழுதுகொண்டிருந்தாள். இது ஹைதர் காதில் கேட்டது. உடனே அவளை வரவழைத்து சங்கதியைத் தெரிந்துகொண்டு, தன் வீரர்களை வரிசையாக நிற்கவைத்தான். தயிர்க்காரி, தன் தயிரைக் கொட்டினவனைச்சுட்டிக்காட்டினாள். ஆனால் அவன் தன் செயலை மறுத்தான். உடனே ஹைதர் "அவனுடைய வயிற்றைக் கிழித்துப் பாருங்கள்; அங்கே இருக்கிறதா இல்லையா என்று தெரியும்" என்று உத்தரவிட்டான். உடனே அவன் வயிறு கிழிக்கப்பட்டது. அதனின்று தயிர் வெளிக்கிளம்பி ஓடிவந்தது. உடனே ஹைதர், அந்த ஏழைத் தயிர்க்காரிக்குப் பத்து ருபாய் கொடுத்து அவளை அவள் வீட்டுக்குக் கொண்டுவிடும்படி தன் சிப்பாய்களுக்கு உத்தரவிட்டுச் சென்றான். இஃது எவ்வளவு தூரம் உண்மையோ தெரியாது. ஹைதர் தன் சிப்பாய்க்கு விதித்த தண்டனை மிகவும் கொடுமையான தென்பதில் ஐயமில்லை. ஆனால் அவன் நியாயத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்தையும், அந்த ஏழைத் தயிர்க்காரிக்குச் செய்த உதவியையும் கவனிக்கவேண்டும். இக்கதை உண்மையானால் ஹைதரின் நடுநிலையும் நீதியில் அவன் கொண்டிருந்த பற்றுள்ளமும் நன்கு விளங்கும்.

"சரித்திரக்காரன்"

### தேசபக்தர்கள் விடுதலை

சிந்து மாகாணத்திலுள்ள ஐதராபாத்தில் பிரசுரமாகும் ஹிந்து பத்திரிகையின் மாஜி ஆசிரியரான டாக்டர் சோதிராம், இம்மாதம் 11-ந் தேதியில் அலியாசிறையினின்ற விடுதலையடைந்தார். பம்பாயில் இவருக்கு 500 ரூபா கொண்ட பணமுடிப் பொன்று சன்மானமாக அளிக்கப்பட்டது.

அலிசகோதரர்கள், டாக்டர் கிச்லு ஆகிய இவர்களுடன் தண்டனைக்குள்ளாக்கப்பட்ட மௌல்வி உஸ்ஸேன் ஆமத் சபர்மதி சிறையினின்று இம்மாதம் 16-ந் தேதியில் விடுதலையடைந்தார்.

### அலகாபாத் நகரபரிபாலன சபையும் வேலை நிறுத்தமும்

இம்மாதம் 17-ந் தேதியில் அலகாபாத் நகரபரிபாலன சபையார் கூட்டங் கூடி, இம்மாதம் 27-ந் தேதியில் இந்தியா முழுமையிலும் வேலை நிறுத்தம் ஏற்படவேண்டுமென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியார் தீர்மானித்துள்ளமையால், அத்தினத்தில் நகரபரிபாலன சபைக் காரியாலயத்தையும் நகரபரிபாலன சபைப் பள்ளிக்கூடங்களையும் மூடிவிட வேண்டுமென்றும், கென்யா தீர்ப்பு விஷயமாய்த் தங்கள் கண்டனத்தைத் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள்.

### பாரிஸ்டர் அன்வார் உதீன்

டாக்டர் மிர் அன்வார் உதீன் என்ற பாரிஸ்டர் இங்கிலாந்தில் நடைபெற்ற வழக்கில் பொய் சத்தியம் செய்தாரென்று குற்றஞ் சாட்டப்பட்டு நியாயவாதித் தொழிலினின்று இங்கிலாந்தில் நீக்கப்பட்டார். இவரை சென்னை ஐகோர்ட்டாரும் 1924-ம் வருஷம் பிப்ரவரிவரை நியாயவாதித் தொழிலை நடத்தக் கூடாதென்று தடுத்து விட்டார்கள்.

### போஸ்ட்மாஸ்டர் கொலைவழக்கு

#### குற்றவாளி கொலைத்தண்டனைக் குள்ளானான்

கல்கத்தாவைச் சேர்ந்த சங்கரிதோலா போஸ்டாபீஸ் போஸ்ட்மாஸ்டரான அமிர் தலால்ராய் என்பாரைக் கொலைசெய்த ஸ்ரீ பரீந்திர குமார கோஷின் வழக்கு கல்கத்தா ஹைகோர்ட் செஷன்ஸில் சின்னாள் நடைபெற்று இம்மாதம் 17-ந் தேதியில் முடிவடைந்தது. விசாரணை செய்த நீதிபதி, ஸ்ரீ பரீந்திர குமாரகோஷுக்குக் கொலைத் தண்டனை விதித்துவிட்டார்.

போகாரா, பெர்கான் ஆகிய இவ்விடங்களிலுள்ள முஸ்லீம்கள் சோவியத் ருஷ்யாவுக்கு எதிரிடையாய் எழுந்து முஸ்லீம் மத ஒழுக்கங்களும் ஆசார ஒழுக்கங்களும் முஸ்லீம் நாடுகளில் பாதிக்கப்படாமல் இருப்பதற்காக வேண்டியவைகளைச் செய்து வருகிறார்கள்.

## புத்தர்படங்கள் ஏன் தடுக்கப்பட்டன?

புத்த பகவானுடைய படங்கள் சினிமா சாலைகளில் காட்டப்படக் கூடாதென்று இரங்கூனில் அதிகாரிகள் தடுத்திருக்கிறார்கள் என்று சின்னாட்களுக்கு முன் பத்திரிகைகளில் ஒரு செய்தி வெளிவந்தது. இப்படம் காண்பிக்கப்படக் கூடாதென்று ஏன் தடுக்கப்பட்டதென்பதைப் பற்றி இரங்கூனில் வெளியாகும் "தேசோபகாரி" பத்திரிகை சில விவரங்களை வெளியிட்டிருக்கிறது. அதில் ஒரு முக்கிய பாகத்தை எடுத்துக் கீழ் வெளியிடுகிறோம்.

இந் நகரிலுள்ள படக்காட்சிச் சாலைகள் சிலவற்றில் புத்த பகவானுடைய சரித்திரம் காட்டப்பட்டது. அதைச் சென்று கண்ணுற்ற பர்மிய பௌத்தர்கள் அதிற்காட்டப் படுபவை பெரும்பாலும் உண்மையான சரித்திரத்துக்கு விரோதமாயிருப்பது கண்டு அதைக் காட்டக் கூடாதென்று கிளர்ச்சி செய்ததின் பயனாய் அப்படக்காட்சி நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது. என்ன விஷயங்கள் விரோதமாயிருக்கின்றனவென்பதைப்பற்றி நாம் சிலரை விசாரித்த வளவில் சிற்சில தெரியவந்தன "பௌத்தசமத்தின்படி புத்த பூஜவான் வேதனைக் குட்பட்டவரல்ல. ஆனால் இப்படக் காட்சியில் அவர் சுரத்தால் அவஸ்தையுற்று நொண்டி நொண்டி நடந்து கீழே நழுவி விழுந்ததாகக் காட்டப்படுகிறது. பௌத்த ஸந்யாசிகள் முண்டனஞ் செய்திருந்தார்கள். [முண்டனஞ் செய்வது பௌத்த ஸந்யாஸிகள் முகக்ஷயமாய் அநுஷ்டிக்க வேண்டிய விதியாகும்.] படத்திலோ அவர்கள் நீண்ட உரோமம் வைத்திருப்பதாகக் காட்டப் படுகிறது. மேலும், படத்தில் காட்டப் படுகிறபடி புத்தருக்கு நியாயமாயிருக்க வேண்டிய சாந்த சொரூபமான நடையுடை பாவனையில்லை. இவ்வாறு பலவிதமான குறைகள் படத்தில் நிறைந்துள்ளன. "படக்காட்சிச் சாலைகளிலும் நாடகங்களிலும் புராதன புண்ணிய சரித்திரங்களைக் காலத்துக்கேற்றபடியும் சந்தர்ப்பத்துக்கியைந்தபடியும், உண்மையான சரித்திரத்தை யறியாமலும் திரித்துக் காட்டுவதும் நடிப்பதும் சாதாரணமாய் விட்டது. ஹிந்துக்கள் தமது மத சரித்திரங்களைப் பொறுத்தமட்டில் இவ்வாறு நேரிடுவனவற்றைக் கண்டியாது எப்படியும் கண்ணிற்கும் காதுக்கும் இனிமையாயிருந்தால் போதுமென்று அவைகளைத் தவறாது ஆதரித்து வருகிறார்கள். ஆனால் பர்மியரின் மதப்பற்று மெச்சத்தக்கது. மேற் சொன்ன படம் காட்டப் பட்டுக்கொண்டு வரும்போது, பர்மிய மஹா ஜனங்கள் பொதுக் கூட்டங் கூட்டி அப்படக் காட்டுதலைப் பலமாகக் கண்டிக்கு முகத்தான் பல தீர்மானங்கள் நிறைவேற்றி யிருக்கின்றனர். இவைகளுட் சிலவற்றை இங்கு குறிப்பிடுகிறோம்: [க] இந்தப் படம் பௌத்த சாஸ்திரங்களுக்கு விரோதமாகவும், புத்த பகவானைப்பற்றி தப்பபிப்பிராயம் உண்டாக்கி பௌத்த மதத்துக்குப் பாதகம் விளைவிக்கக் கூடியதாயுமிருப்பதால் அதை உலகத்தின் எந்தப் பாகத்திலும் காட்டக் கூடாது. [உ] புத்தர் வேடந்தரித்து நடித்து எடுக்கப்படும் எந்தப் படத்தையும் எவ்விடத்துங் காட்டக் கூடாது. [ந] புத்தருடைய விக்ரகங்களையும் ஆலயங்களையும் ஆலயங்களில் திவ்ய பரிசுத்தத் தக்குப் பங்கம் நேரிடும்படி காட்டக் கூடாது. [ச] புத்தருடைய விக்ரகங்களையும் ஆலயங்களையும் வியாபாரக் குறிகளாக உபயோகிக்கக் கூடாது; வியாபார விளம்பரங்களிலும் பொறிக்கப்படக் கூடாது.

[பர்மிய மகா ஜனங்கள் மேற்கண்ட தீர்மானங்களைச் செய்து படங்கள் பரிசோதிக்கும் ஸினிமா ஸென்சர் போர்டாருக்கனுப்பி அவர்கள் இப்படத்திற்குக் கொடுத்த அனுமதியை வாபீஸ் செய்து கொள்வதுமன்றி அவர்கள் இனிமேல் இத்தகைய படங்களைக்காட்ட உத்தரவளிக்கக் கூடாதெனக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். போலீஸ் கமிஷரின் உத்தரவால் இந்தப் படம் நிறுத்திவைக்கப்பட் டிருக்கிறது.]"

கொரியாவின் வடமேற்குக் கடற்கரையில் ஏற்பட்ட அலைகளின் கொந்தளிப்பால் நூற்றுக் கணக்கானவர்கள் இறந்துவிட்டார்கள். இதல்லாமல் நூற்றுக் கணக்கானவர்களின் வீடுகளும் ஜலத்தால் அடித்துக் கொண்டு போகப்பட்டன. கப்பல்களுக்கும் அதிக நஷ்டம் உண்டாகியிருக்கிறது.

### காதலுங் கொலையும்

சென்னை இராணுவப்படையைச் சேர்ந்த சார்ஜண்ட் ஜான் பார்ஸ்டன் என்பார் பூனா என்ஜினீரிங் கலாசாலைத் தொழிற்சாலை மானேஜரான ஸ்ரீமான் இக்ஹாம் என்பாரின் மகளைத் தாம் அங்கேயிருந்தபோது நேசித்து வந்திருந்தார். இப்படியிருக்குஞ் சந்தர்ப்பத்தில் இவர் சென்னைக்கு மாற்றப்பட்டார். உடனே ஒரு மாதத்திற்கு ஓய்வு எடுத்துக்கொண்டு பூனாவுக்குச் சென்றார். சென்ற 17-ந் தேதியில் தான் நேசித்த பெண்ணும் அவளுடைய தாயாரும் இன்னொருவருடன் கிர்கி எனுமிடத்திலுள்ள படக்காட்சிச் சாலையில் இருப்பதைக் கண்டு பொறுதவராய் இராணுவ தலத்திற்குச் சென்று ஒரு துப்பாக்கியைக் கடனாக வாங்கி ஸ்ரீமான் இக்ஹாம் வீட்டிற்குப் போந்து அவருடைய குமாரத்தியைச் சுட்டுக் கொன்றுவிட்டார்.













## "நவசக்தி" மும்முறை

### ஒரு வேண்டுகோள்

சோதர, சோதரிகளே!

நந்தமிழ்நாட்டிற்கு, சிறப்பாக தமிழொன்றே அறிந்தவர்கட்குப் புத்துயிரளித்ததெது? தமிழின் நறுமணத்தைத் தமிழ் நாடெங்கும் பரப்பிக் கமழச்செய்ததெது? சகோதரத்வத்தைப் புகட்டியதெது? சுதந்திர தாகத்தைக் கிளப்பியதெது? எனும் வினாக்களை ஒருவன் பொறிப்பின் ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களை ஆசிரியராய்ப் பெற்றிருந்த "தேசபக்த"னும் ஆசிரியராய்ப் பெற்றிருக்கிற "நவசக்தி"யும் என விடையிறுப்பது மிகையாகாது. "தேசபக்தன்" எந்நிலையிலிருந் துபதேசஞ் செய்தான்? அநுதினமும் நம்மிடைத் தோன்றி நல்லுபதேசஞ் செய்தான் ஆனால், 'நவசக்தி' எந்நிலையிலிருக்கிறான்? வாரம் ஒரு முறையே வந்து சிலம்பை ஒலிக்கிறான். சக்தியின் 'சிலம்பொலி'யை வாரமும்முறை அள்ளிப்பருகி இன்பவாரிதியில் திளைத்திருக்க வேண்டுமென ஆர்வங்கொண்டோம். இவ்வார்வத்தைச் 'சக்தி'யின் ஆசிரியருக்கும் அறிவித்துக் கொண்டோம். அன்னார் நம் கோரிக்கைக் கிணங்கி (17-8-23)ல் வெளிப்போந்த சக்தியின் தலையங்கத்தில் "பெருவிண்ணப்பம்" எனும் மகுடத்தின் கீழ் நமக்கு விடுத்துள்ள விடயத்தை ஆய்ந்தால் கிடைக்கும் செம்பொருள் நமது கடமை என்பதே. அக்கடமையாவது யாது? நம்முள் தனவந்தராயுள்ளோர் இயன்றவரை பொருள் உதவுவது ஒன்று; இன்றேல் குறைந்தது 5 ரூபாயேனும் இனுமளிப்பது இரண்டு; மும்முறைப்பதிப்பிற்கு ஒரு வருஷ சந்தாவாகிய ரூ 15 முன் பணமனுப்பிச் சந்தாதாரராய்ச் சேர்வது மூன்று; ஒவ்வொருவரும் தம்மாலியன்றவரை சந்தாதாரர்களை சேர்த்தனுப்புவது நான்கு. இவைகளே நமது கடமையாகும். இக்கடமையை ஒல்லும் வகை ஆற்றுவதற்கும் காலம் வரையறுக்கப்பட்டிருக்கிறது. செப்டம்பர் பதினைந்துக்குள் பொருள்நிலை, கோரிய அளவிற்குச் செழுமையுறும் எனும் நம்பிக்கை புண்டாக்கவேண்டும். ஸெப்டம்பர் கடைசிக்குள் போதிய அளவு தொகை சேர்க்கப்படல் வேண்டும். நேயர்களே! நம் கடமையை ஆற்ற அவகாசமோ அதிகமில்லை. நமக்கு வாய்த்த நற்காலத்தை வாளாகழித்தல் கூடாது. 'இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார் கடனறி காட்சியவர்' எனும் திருவள்ளுவரது திருவாக்கிற் கிலக்காகி இயன்ற அளவு உதவி செய்யவேண்டும். சகோதரர்களே! சகோதரிகளே! தமிழ்த் தாயை மறவாதேயுங்கள்! தேசத்தைக் கவனியுங்கள்! பொருளை உதவுங்கள்! கடமையை ஆற்றுங்கள்! வாரமும்முறை சிலம்பொலியைக் கேளுங்கள்! சத்யாக்ரகத்தின் பெற்றி புணருங்கள்! சத்யஸ்வரூபனே! எனது வேண்டுகோளுக்கு வேண்டுவ செய்வாயாக.

வி. கி. ஸ்ரீதர ஐயர்.

### தமிழ் நாட்டிற்குப் பத்திரிகை வேண்டும்

தமிழ் நாட்டில் காங்கிரஸ் மகாசபையின நோக்கங்களையும், நிறைவேற்றும் தீர்மானங்களையும் எடுத்துரைத்து அவைகளை அமுலுக்குக் கொண்டுவரஒருதினசரி தமிழ்ப்பத்திரிகைஇல்லாதிருப்பதுபெருங் குறையாய் இருக்கிறது. இதுபோன்ற ஒரு தமிழ் தினசரி இருத்தலே காங்கரஸ் பிரசாரமாகும். இதுவிஷயமாகத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார் ரூபா 10000 வரைகொடுக்கத் தீர்மானித்திருந்தும் ஒரு வருஷமாக ஒன்றும் வழி பார்க்கவில்லை. காங்கிரஸ் கமிட்டியார் இது விஷயமாக மௌனம் சாதிப்பது குறிப்பிடத்தக்கது. இதுவிஷயமாக ஒரு ஏற்பாடு செய்யாவிட்டால் தமிழ்நாடு மேல்மேலும்காங்கிரஸை மறந்துவிடும். "நவசக்தி"யைக் கூடிய விரைவில் வாரமும்முறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்குக்கடவுள் அருள்புரிவாராக.

தங்கள்
ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி,
குன்னியூர்.

கல்கத்தாவைச் சேர்ந்த ஹௌராவிலுள்ள ஈப்ராஹீம் உள்ளிட்ட நால்வர் கொள்ளையடிக்க முயற்சித்தார்களென்று குற்றஞ் சாட்டப்பட்டு ஹௌரா ஜில்லா நீதிபதி முன்னிலையில் வழக்கு நடைபெற்றது. இறுதியில் மாஜிஸ்ட்ரேட் ஏழு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

## வெள்ளப் பெருக்கு.

### ஜனங்களின் துர் அதிர்ஷ்டம்

#### மைசூர்

மைசூரிலுள்ள மலைநாடு பிரதேசத்தில் சென்ற ஜூலைமாதம் ஏற்பட்டவெள்ளத்தின் பயனாய்ப் பாதிக்கப்பட்டவர்களுக்குக் கஷ்ட நிவாரண ஏற்பாடுகளை அரசாங்கத்தார் செய்துள்ளார்கள். இன்னும் சாலைகளையும் மற்றப் பொது ஸ்தாபனங்களையும் உடனே பழுது பார்ப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையுஞ் செய்யக் கட்டளை பிறப்பித்துள்ளார்கள்.

மைசூர் பிரதேசத்தில் பாயுங் கபிலநதியில் வெள்ளப் பெருக்கெடுத்திருக்கிறது. இதன் பயனாய் நஞ்சன்குட் நகரின் சில பாகங்கள் நீரால் சூழப்பட் டிருக்கின்றன. ஓர் இடத்தில் ஏழடிக்கு ஜலம் தேங்கியிருந்தது. ஸ்ரீரங்கப் பட்டணம் காவிரி ஆகிய இவ்விடங்களில் காவிரி நதியின் பெருக்கினால் வெள்ளம் ஏற்படுமென்று தெரிகிறது.

#### காவிரி

காவிரியில் வெள்ளப்பெருக்கு இதுபோழ்து குறைவடைந்திருக்கிறது. வெள்ளத்தால் பாதிக்கப் பட்டவர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் யாவுஞ் செய்யப்பட் டிருக்கின்றன.

இம்மாதம் 17-ந் தேதியில் சிவ சமுத்திரத்தில் காவிரி நதியில் கட்டப்பட்டிருக்கும் பாலமானது நாசமாய்விட்டது. இருபது கஜத்திற்கு வாராவதி கட்டிடம் வீழ்ந்து விட்டது.

#### மலையாளம்

சமீபத்தில் வடமலையாளத்தில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கின் பயனாய் சுமார் 4000 வீடுகள் நாசமடைந்திருக்கின்றனவென்றும் இதன் பயனாய் 20,000 பேர் வீடு வாசல் துணி மணி இன்றிக் கஷ்டமுறுகின்றனர் என்றும் இவர்களுக்கு உதவி இன்றியமையாததாய் வேண்டியிருக்கிறதென்றும் அதற்காகக் குறைந்தது 50,000 ரூபா வேண்டியிருக்குமென்றும் ஸ்ரீமான் கே. பி. கேசவமேனன் பத்திரிகைகளுக்குத் தெரிவித்திருக்கிறார். இம்மாதம் 16-ந் தேதியில், கள்ளிக்கோட்டையில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கின் பயனாய், புத்தியாரம், புத்தியா பாளையம், சாலபுரம் ஆகிய இவ்விடங்களில் உள்ள வீடுகள் வீழ்ந்துவிட்டன. வீடுகள் வீழ்ந்ததன் பயனாய்ச் சிலருக்குக் காயமும் ஏற்பட்டது. இப்போது வெள்ளம்குறைந்திருக்கிறது. இம்மாதம்17-ந்தேதியில்கள்ளிக்கோட்டை நகரபரிபாலனசபையார்கூட்டங்கூடி, வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்வதற்காக எட்டு நகர சபை அங்கத்தினர்களும் வேறு நான்கு அங்கத்தினர்களும் கூடிய ஒரு கமிட்டியை நியமித்தார்கள். நகரசபை அங்கத்தினர்கள் 550 ரூபா கஷ்டத்தால் பாதிக்கப்பட்டவர்களின் உதவிக் கெனக் கொடுத்துள்ளார்கள்.

#### தஞ்சாவூர்

தஞ்சாவூர் ஜில்லாவில் பாயும் வீரசோழன் என்ற நதியில் பெருத்த வெள்ளப் பெருக் கேற்பட்டிருக்கிறது. ஆடுதுறைக்குச் சமீபத்திலுள்ள கோவிந்தபுரத்தில் உடைப்புகள் ஏற்பட்டன. நரசிங்கன் பேட்டைக்கும் ஆடுதுறைக்கும் இடையில் பதினாறு கம்பங்களுக்கு இடையிலுள்ள தண்டவாளங்கள் ஜலத்தால் அடித்துக்கொண்டு போகப்பட்டன. ஆடுதுறையிலும் அதன் சுற்றுப் பக்கங்களிலும் நாலடி உயரத்திற்கு ஜலம் நின்று கொண்டிருக்கிறது. ஜனங்கள் தங்களுக்குச் சொந்தமானவைகளுடன் உயர்ந்த இடங்களில் ஏறி உயிருக்காகக் காத்துள்ளார்கள். தஞ்சை ஜில்லாவில் மற்றும் பல ஊர்களில் வெள்ளத்தின் பயனாகஉடைப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. வீடுகளும் பயிர்களும் நாசமாக்கப்பட்டன.

#### கங்கை

கங்கை பாடலி புத்திரத்திற் கருகில் வெள்ளப் பெருக்கெடுத்திருக்கிறது. இதனால் தீனபூருக்கு வட மேற்கிலுள்ள பாகங்கள் ஜலத்தால் பாதிக்கப்பட்டிருக்கின்றன, அநேக கிராமங்கள் நீரால்சூழப்பட்டதனால் வீடுகளும் நாசமாய்ப் போய்விட்டன. மனிதர்கள் சேதம் ஒன்றுமில்லை, ஆனால் கணக்கற்ற ஆடு மாடுகள் வெள்ளத்தில் மூழ்கி விட்டன. ஜனங்களை வெள்ளத்தினின்று காக்க சௌகரியங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

இவ்வெள்ளப் பெருக்கின் பயனாய் ரெயில்வே தண்டவாளங்கள் அநேக இடங்களில் அடித்துக்கொண்டு போகப்பட்டன. அநேக கிராமங்களில் ஜனங்கள் வீட்டுக் கூரைகளின்மீதுஏறி உயிரைக் காப்பாற்றி வருகிறார்கள்.

#### பர்மா

பர்மாவிலுள்ள பேகின் ஜில்லாவில் ஏற்பட்ட வெள்ளத்தின் பயனாய் ஏற்பட்ட நஷ்டம்:— 14,000 ஏக்கர் விஸ்தீரணமுள்ள நெற்பயிர் நிலங்கள் நாசமாக்கப்பட்டு விட்டன. இதல்லாமல் மற்ற நிலங்களும் நாசமாகி யிருக்கின்றன. வெள்ளம் செப்டம்பர் மத்திக்குள் குறைந்து விட்டால் பெரும்பாலான ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலங்களில் திரும்பவும் பயிர்செய்யலாம். சுமார் 150,000 ஜனங்கள் கஷ்டமுறுகிறார்கள். 4200 வீடுகள் ஜலத்தில் மூழ்கியிருக்கின்றன. இன்னுஞ் சில வீடுகள் தண்ணீரால் சூழப்பட் டிருக்கின்றன.

## ஹிந்து மகா சபை

### பண்டித மாளவ்யாவின் உருக்கமான பிரசங்கம்

இம்மாதம் 19-ந் தேதி பிற்பகலில் ஹிந்து மகா சபை, பண்டித மாளவ்யாவின் தலைமையில் காசியில் கூடியது. அக்கூட்டத்திற்கு இராஜாராம்பால்சிங், ஸ்ரீமான்கள் சிந்தாமணி, கிசோர்பிர்லா, தர்மாபாய், சுவாமி சிரத்தானந்தர், பண்டித ஜவஹரிலால் நேரு, பாபு புருஷோத்தம் தாஸ் தாண்டன், சிவபிரசாத் முதலிய சுமார் 6000 பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அநேகர் போதிய இடமில்லாமையால் பந்தலுக்கு வெளியில் இருந்தார்கள்.

பண்டித மாளவ்யாவை அக்கிராசனராகப் பிரேரேபிக்கும்போது மகாபோதி சங்கத்தைச் சேர்ந்த அங்காரிகாதர்மபாலும் ஸ்ரீ சி. ஓய். சிந்தாமணியும் மற்ற மதத் தலைவர்களும் ஹிந்து மதத்தின் புராதனத்தைப் பற்றியும் அதன் விருத்தியைப் பற்றியும் பேசினார்கள்.

அக்கிராசனராய் அமர்ந்த பண்டித மதன் மோகன் மாளவ்யா, வேதமந்திரங்களை உச்சரித்துக் கொண்டு பிரதிநிதிகளுக்கு வந்தனமளித்தும் பேசியதன் சுருக்கம் வருமாறு:—

• • •

ஹிந்து நாகரிகம், நான்கு வர்ணங்கள், நான்கு ஆசிரமங்கள் ஆகிய இவைகள் மிகப் பழமையானவையும் சிறப்பு வாய்ந்தவையுமாகும். மனிதவர்க்கத்திற்கு அதிக நன்மையைச் செய்த புத்தரை இந்துக்கள் தசாவதாரங்களில் ஒருவராய வணங்குகிறார்கள். புத்தருடையப்பத்து கொள்கைகள் மனு ஆசாரம் சம்பந்தமாகச் செய்துள்ள விதிகளுடன் ஒத்திருக்கின்றன. இராமர், கிருஷ்ணர், பீஷ்மர், துரோணர், யுதிஷ்டிரர், அர்ச்சுனன், வசிஷ்டர், கௌதமர், ஆகிய இவர்களனைவரும் இந்துக்களின் மூதாதைகளாவர். மத விஷயங்களில் விட்டுக்கொடுக்கும் சுபாவமும், மன்னிக்கும் சுபாவமும் இந்து சமூகத்தின் பிரதான கொள்கைகளாகும். இதற்குச் சான்றாகப் பிரிதிவிராஜன் முகமது கோரியை விடுதலை செய்ததைக் கூறலாம் ஹிந்துக்களின் முக்கிய கொள்கையாய் இருக்கப்பது தங்களுக்குப் பிறரால் ஒரு கெடுதியும் வரக்கூடாது அதைப்போல் தாங்களும் பிறருக்கு ஒருவிதக் கெடுதலும் செய்யக்கூடாது என்பதாகும். இந்துக்கள் இராஜ்யத்தைவிட தர்மத்தையே பெரிதும் கவனித்து வந்தவர்களாவர்.

• • •

காங்கிரஸானம் 1885 முதல் 1915-ம் வருடம்வரை இந்தியாவின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டுக் கின்றது. 1916-ம் வருஷத்தில் ஹிந்துக்களும் முகம்மதியர்களும் சேர்ந்து அரசாங்கத்தாரை மன்றாடிய தன்பயனாய் ஏதோ ஒரு வகையான சீர்திருத்தங்கள் வழங்கப்பட்டன. அது முதல் நம்முடைய நிலைபரித பிக்கத்தக்கதாய் இருக்கிறது. உலகத்தின் பிரதம இருடியாய் இருக்கும் மகாத்மா காந்தி சிறைபட்டுவிட்டார். அவரை இன்னும் விடுதலை செய்யாமல் இருப்பதே நம்முடைய பலமின்மையைக் காட்டுகின்றது. மகாத்மா காந்தி சிறையிலிருக்கும் விஷயமாய் ஜனங்கள் அதிக கோதிப்புக் கொண்டுள்ளார்கள். வியாபாரம் சீர்குலைந்துவிட்டிருக்கிறது. வரிகள் உயர்கின்றன. அரசாங்கத்தார் ஜனங்களின் அபிப்பிராயங்களை மதித்து நடப்பதைவிட்டு விட்டார்கள்.

• • •

நான் முகம்மதியர்களுக்குக் கேடுழ வேண்டுமென் றெண்ணவில்லை. இன்னும் இந்துக்கள் முகம்மதியர்களுக்கு மேலாக இருக்க வேண்டுமென்றும் கருதவில்லை. நான் அங்ஙனம் கருதினால் கடவுள் எனக்கு அதிகமான தண்டனையைக் கொடுக்கட்டும். இந்துக்கள் தங்கள் சகோதரிகளையும் பெண்களையும் மற்றுமுள்ளவர்களையும் காத்து மதத்தை ரட்சிக்காவிட்டால் அவர்கள் இவ்வுலகினின்று அடியோடு ஒழிந்துவிட வேண்டுமென்று கூறுகிறேன். நாம் பலவீனர்களாய் இருப்பதற்குக் காரணம் நம்முடைய கடமை யாதென்பதை மறந்து விட்டமையே யாகும். நம்மை இந்துக்கள் என்று அழைத்துக்கொள்ள பின் வாங்கக்கூடாது. இந்துக்கள் தன்புறுத்தப்பட்ட சாலையில் நாம் முகம்மதிய சகோதரர்களை அடுத்து அவர்கள் தலைவர்கள் மூலமாய்ச் சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

• • •

பிரம்மசரியம் மிக முக்கியமானது. தேகக் கட்டுப்பாடுக்கான இடங்கள் ஆங்காங்கு ஏற்பட வேண்டும். ஸ்திரீகளின் கல்வியை விருத்தியாக்க வேண்டும். சீதனம் கொடுக்கும் வழக்கம் அடியோடு ஒழிந்துவிடவேண்டும். தீண்டப்படாதவர்களை நாம் செவ்வையாய்க் கவனிக்கவேண்டும். அவர்களும் நாம் அநுஷ்டிக்கும் ஹிந்து மதத்தையும் இந்து தெய்வங்களையுந்தான் கும்பிட்டு வருகிறார்கள் சில பணக்காரர்கள் கோயில்களும் கட்டுகிறார்கள் (ஈச்சந்தர்ப்பத்தில் சுவாமி சிரத்தானந்தர், தீண்டப்படாதவர்கள் கோயிலுக்குள் விடப்படுவதில்லையென்று கூறினர். இதற்கு மேல் பண்டிதர் தம் கண்களினின்றி நீர் தாரை தாரையாகப் பெருக தலைக்குட்டையைக் கையிலேந்திக் கொண்டு ஹிந்து மதத்தைக் கடைப்பிடிக்கும் தீண்டப்படாத சகோதரன் காலின் கீழ் ஏன் இதை வைக்கக்கூடாதென்றும் ஏன் அவர்களைக் கோயிலுக்குள் விடக்கூடாதென்றும் அவர்களைத் தடுக்க எனக்கென்ன அதிகாரம் இருக்கிறதென்றும் கேட்டார்.)

• • •

மத விஷயங்களில் பற்று இருக்கவேண்டியது இன்றியமையாததாகும். தீண்டப்படாதவர்களை நம்முடைய கிணறுகளிலிருந்து ஜலம் முதலானவை எடுத்துக் கொள்ள விடவேண்டும். இராஜாராம் தேவர் என்பார் 48 நாள் பட்டினி கிடந்த பின்னர் தின்பதற்குச் சிலவற்றைப் பெற்றார். உடனே ஒரு பிராமணனும் பின்னர் இரண்டு ஆதிதிராவிடர்களும் நாயுடன் இவரிடம் போந்து உணவு கேட்கத் தம்மிடமிருந்தவற்றை யெல்லாம் கொடுத்து விட்டுத் திருப்தியடைந்தார். இதைப்போ லல்லவா நாம் தீண்டப்படாதவர்களுடன் நடக்கவேண்டும். சுத்தி இயக்கம் இருக்க வேண்டியதே. இந்து மதத்தினின்று பிற மதங்களுக்குச் சென்றவர்களைத் திரும்பவும் இந்து மதத்தில் அவர்கள் இஷ்டப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம் என்று ஹிந்து சாஸ்திரங்களில் விதி இருக்கின்றது.

• • •

இந்து மதத்தினின்று பிற மதங்களைத் தழுவினர்களை இந்துக்களாகிய நாம் நம் இனத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும். பெருந் தொகையையுடைய நாம் இப்போதே கேவலமாய் நடத்தப்பட்டால் பின்னர் ஜனத் தொகை குறைந்தபோது எங்ஙனம் நடத்தப்படுவோம் என்பதைக் கவனியுங்கள். ஆகவே இந்து மதத்திலுள்ளவர்களை பிறமதம் தழுவும்படியாய் விட்டுக்கொண்டு போகக்கூடாது. நாம் பிறமதம் தழுவியர்களை நம் மதத்தில் சேர்த்துக் கொள்ளவேண்டும். இங்ஙனஞ் செய்தாலல்லாமல் ஹிந்துமதம் விருத்தியடையாது. பண்டித மாளவ்யா, பிறகு தீண்டப்படாதவர்களை இந்துமதத்திற்குள் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று கண்களில் நீர் தாரைதாரையாகப் பெருகக் கூறிக்கொண்டே தம் ஆசனத்தில் சாய்ந்து விட்டார். 7 நிமிடம் வரை விடாது ஆரவாரம் நடந்தேறியது.

• • •

இந்து, மகாசபையார் லாலாலஜபதிராய் சிறையினின்று வெளி வந்தமை குறித்துச் சந்தோஷிப்பதாயும் அவர் சுகஜீவியாயிருக்க வேண்டுமென்றும், பண்டிராம் பஜசௌத்ரி இறந்தமைக்கு வருந்தியும் அவருடையமனைவியாராகிய ஸ்ரீமதி சாரளாதேவிசௌதராணிக்குத் தங்கள் அநுதாபத்தைத்தெரிவித்தும் நாபா மகாராஜா இராஜ்யத்தைத் துறக்கதற்காக அரசாங்கத்தாரைக் கண்டித்தும் பசுக் கொலையை நிறுத்துவதற்கான முறைகளை அரசாங்க வேண்டுமென்றும் ஐக்கியத்தை எல்லா சமூகங்களிடையும் உண்டுபடுத்த வேண்டுமென்றும் கிராமசங்கங்கள் விருத்தியாக வேண்டுமென்றும் சுதேசி விருத்திக்காகப் பாடுபடவேண்டுமென்றும் அந்நிய நாட்டுச் சரக்குகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்றும் ஹிந்தி பாஷையை விருத்தியாக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

### ஹசரத் மோஹினி வழக்கு

சிறைச்சாலையிலிருந்து இரகசியமாய்க் கடிதப் போக்குவரவு வைத்துக்கொண்டதாகக் குற்றஞ் சாட்டப்பட்ட ஸ்ரீஹசரத் மோஹினியின் வழக்கு 20, 21-ந் தேதிகளில் எர்வாடா சிறையில் நடைபெற்றது. சிறைக்கு வெளியிலுள்ளவர்களைச் சாட்சிகளாக விசாரிக்க முடியாதென்று கூறி அதிகாரிகள் ஹசரத்மோஹினியின் வின்னப்பத்தைத் தள்ளிவிட்டார்கள் வழக்கு நடைபெற்றுவருகிறது.

காலஞ் சென்ற சர்பிரோஜிஷா மேதாவின் பெயரால் பம்பாய் சர்வகலாசாலையின் (சரித்திரம் பொருளாதார) வித்தியார்த்திகளுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்க சர்பிரோஜிஷா மேத்தா ஞாபகார்த்தக் கமிட்டியார் 18,000 ரூபா பம்பாய் சர்வகலாசாலைக்குக் கொடுக்கின்றனர்.

• • •

ஆயுதபாணிகளான சில கொள்ளைக்காரர்கள் ஜமால்பூர் என்ற கிராமத்திற்குள் கொள்ளை யடிப்பதற்காகச் சென்றார்கள். இவர்களில் இருவரை அக்கிராமத்தைச் சேர்ந்த பத்வாரி ஒருவன் சுட்டுக்கொன்று விட்டான். இதற்குமேல் மற்றக் கொள்ளைக்காரர்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள். இதனால் கிராமம் கொள்ளைக்கு இரையாகாமல் போய்விட்டது.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1923ஸு ஆகஸ்ட்மீ 24உ

## என் ?

ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் பொது ஜன சேவையினின்றும் விலகி ஒய்வுபெற உறுதிகொண்டிருக்கின்றார் என்பது அவர் 'எங் இந்தியா'வில் எழுதிய எழுத்தால் தெரிய வருகிறது. கயை காங்கரஸில்தான் இவர் பெருமை விளங்கிற்று. அன்று தொட்டுத் தேசம் இவரைத் தலைவராகக்கொண்டது. கயை காங்கரஸ் கூடி இன்னும் ஓராண்டாகவில்லை. இதற்குள் இவர் ஒய்வுபெற ஏன் விரும்புதல் வேண்டும் ?

ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் குறிப்பிட்டுள்ள காரணங்கள் ஏற்றுக் கொள்ளற்பாலனவல்ல. ஸ்ரீ ஆச்சாரியார் தம்மைப் பிடிவாதக்காரர் என்றும், புகழ்பெருமை நாடுகிறவரென்றும் சிலர் கூறுவதைத் தாம் ஒய்வுபெற விரும்பியதற்குக் காரணமாகக் கூறுகிறார். இவ்வாறு தலைவர்களைச் சிலர் தூற்றுவது இயல்பே. எந்த நாட்டில் எந்தத் தலைவர் தூற்றப்படவில்லை? தூற்றப்படாத தலைவர் உலகிலில்லை என்றே கூறலாம். ஒரு சிலர் தூற்றுவதைக் காரணமாகக் கொண்டு நாட்டுக்குத் தொண்டுசெய்வதை விடுத்து ஒய்வுபெற விரும்புவது இராஜகோபாலாச்சாரியார் போனறார்க்கு அழகன்று.

ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரைத் தேசம் விலக்கவில்லை; காங்கரஸ் விலக்கவில்லை. அவரே விலகுகிறார். அவரைப் பொதுஜன சேவையினின்றும் ஒழிக்க வேண்டுமென்று சில தலைவர்கள் சங்கணங் கட்டித் திரிந்த தன்மையே. சென்னைக் கடற்கரையில் கூடுங் கூட்டங்கள் இராஜகோபாலாச்சாரியாரை வையவே கூட்டப்படுகின்றன என்று அறிஞர்கள் கூறுவார்கள். இதற்குக் காரணம் பொறாமையேயாகும். பொறாமையாளர் சொற்களைக் கேட்டு மனம் வருந்தித் தேச சேவையினின்றும் விலகுவது நியாயமாகாது.

தலைவரென வெளி வருவோர் பல கஷ்டங்களுக்கு உட்பட்டே தீரல் வேண்டும். திட்டு அடி உதைகளும் தலைவர்கள்பால் அணுகுதல் உண்டு. கிறிஸ்து ஏற்றுக் கொண்ட வசைச் சொற்களுக்கு ஓரளவுமுண்டோ? சோக்ரதர் எவ்வளவு துன்பத்துக்குள்ளாயினர்? நமது மஹாத்மா எவ்வளவு கஷ்டப்பட்டார்? தலைவர்கள் குறை கூறப்படுவது இயல்பே. அவர்கள் மீது வீண் பழிகள் சுமத்தப்படுவதுமுண்டு. இவைகளைக் கண்டு ஒதுங்குவது தலைவர்கள் இலக்கணமாகாது. தலைவர்களெனவெளி வருவோர் உலகப் போற்றல் தூற்றல்களுக்கு விருப்பு வெறுப்பு கொள்ளாது தங்கள் மனச்சான்று வழி ஒழுகித் தங்கள் கடனாற்றல் வேண்டும். நிஷ்காமிய கர்மயோகிகளாயிருந்து தங்கள் கடன்களைத் தலைவர்கள் ஆற்றுதல் வேண்டும்.

கயை காங்கரஸில் ஒத்துழையா மூலமாகிய சட்டசபை பகிஷ்காரத்தை அறவே கல்லி வெந்நீர்விடத் தாஸ் கூட்டத்தார் முயன்றபோது, சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் நமக்கு ஆண்டவனளித்த மதிநுட்பத்தால் நியாய வாதம் புரிந்து பரதகண்டத்தின் புகழை நிறுத்தினர். பாரத நாட்டிற்கே ஏற்படவிருந்த அவமானத்தைப் போக்கிய ஒரு பெரியார் - நமது இராஜகோபாலாச்சாரியார் - மனம் வருந்தி விலக நினைந்தது எமது உள்ளத்தை உருக்குகிறது.

இராஜகோபாலாச் சாரியார் தேசசேவைக் கென்றே எல்லாவற்றையுந் துறந்தார், தம்மால் இயன்றவளவு நேர்மையாகவே நாட்டுக்குச் சேவை செய்துவந்தார். சேவையில் சில குறைகள் நிகழ்ந்திருக்கலாம். குறைகள் நிகழாமல் கருமங்களை ஆற்றுகின்ற மனிதன் ஒருவன் உலகிலிருக்கிறானா? மனிதப் பிறப்பே குறையுடையது. "குறைவிலா நிறை"வாக உள்ளவன் ஆண்டவனொருவனே. குறைவிலா நிறைவு பெறுகிறவர்க்கு இவ்வுலகில் என்ன வேலை? குறையுடையவர்களுக்கே இவ்வுலகில் கர்மமுண்டு. ஒருவன் குறைகளைக் கவனிப்பதைப் பார்க்கிலும் அவன்பாலுள்ள குணங்களையே கவனித்தல் வேண்டும். ஆனால் நம்மவர்களுக்குக் குறைகள் புலனாவதைப்போலக் குணங்கள் புலனாவதில்லை. குற்றங்களைப் போற்றவேண்டுமென்று நாம் கூறுகின்றேமில்லை. நல்லெண்ணத்தால் குற்றங்களைக் களைய முயல்வதும் மக்கள் கடமைகளுளொன்றே. ஆனால் நம்மவர்களிற் சிலர் வேண்டுமென்றே ஒருவர் மீது வன்மங்கொண்டு அவர் புகழைக் கெடுக்கப் பல பொய்மைகளைப் புனைந்து, பலபழிகளைச் சுமத்தி வருகிறார். இச்சிறுமைக் கூட்டத்தாரால் நாட்டின் வளர்ச்சி குன்றுகிறது. இக்கூட்டத்தை ஒழிக்கும் பொறுப்பைப் பொது ஜனங்கள் ஏற்றுக் கொள்ளல் வேண்டும். மேடையில் பிறரைக் குறை கூறுவதையே பெரிய பேச்சாகக் கொள்பவரிடம் பொது ஜனங்கள் எச்சரிக்கையாயிருத்தல் வேண்டும். இப்பொழுது மேடைகளில் ஒருவரை ஒருவர் குறைகூறும் பேச்சன்றித் தேசபக்தி எழுப்பக் கூடிய வேறு பேச்சு ஏதேனும் உண்டோ? இப்பேச்சால் சில நல்லதலைவர்கள்மனம் புண்பட்டு அடங்கிவிட எண்ணுவர். எவர் பேச்சுக்கும் மஞ்சாது சேவைசெய்யுந் தலைவர்களுமுளர். நமது இராஜகோபாலாச்சாரியார் மனம் புண்பட்டே வாளா கிடக்க எண்ணுகிறார். அவர் போன்ற தலைவரையிழக்க நாடு விரும்பாது.

ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியர் மெலிந்த உடலுண்டயவர்; நோயாளி. அவர் தமது உடல்மெலிவை-நோயைக் காரணமாகக் கொண்டு ஒய்ந்திருக்க விரும்புகின்றாரில்லை. மற்ற நண்பர்கள் தம்மைப் பலவழியிலுஞ் சந்தேகித்துப் பலவாறு பேசுவதைக் காரணமாகக்கொண்டே அவர் ஒய்ந்து கிடக்க எண்ணுகிறார். இதைக் காரணமாகக் கொண்டு ஏன் விலகல் வேண்டுமென்று நமது ஆச்சாரியாரை நாம் கேட்கிறோம். டெல்லி விசேஷ காங்கரஸ் ஆச்சாரியாரை அழைக்கிறது. அவர் ஆண்டுச் சென்று ஒத்துழையாமைக்கு ஆக்கந் தேடுவாராக.

## சத்தியாக்கிரகத்தின் வெற்றி

நாகபுரி கொடிப் போராட்டம் முடிவடைந்து விட்டது. சத்தியாக்கிரகம் வெற்றி பெற்று விட்டது. எர்வாடா சிறையில் தவங் கிடக்கும் காந்தியடிகளுடைய ஆன்ம சக்தியின் பெருமை, அதன் உண்மை, அதன் தத்துவம் இப்பொழுதேனும் அதிகாரிகளுக்கு விளங்கியிருக்கும் என்று நம்புகிறோம். சென்ற பதினெட்டாந் தேதி நாகபுரியில் அதிகாரிகளால் தடுக்கப்பட்ட எல்லைக்குள் நூறு தொண்டர்கள் ஊர்வலமாகச்சென்றார்கள். நாண் [illegible] தூசணிந்து, சுதந்திரக் கொடி பிடித்து, முன்னே இரண்டு இளைஞர் தேசிய கீதங்கள் பாடிக்கொண்டு செல்ல, பின்னே அறிவும் அநுபவமும் தியாகமும் பொலிந்து விளங்கும் தலைவர்கள் கம்பீரமான பார்வையுடன் தொடர, சத்தியாக்கிரக ஊர்வலம் நாகபுரி சிவில்லைனுக்குள் சென்றது என்பதை நேயர்கள் உள்ளத்தில் பதித்துப் பார்க்கும்போது ஒரு புதிய உணர்ச்சி உண்டாகும் என்பதில் ஐயமில்லை. இவ்வூர்வலம் அவ்வழியாகச் சென்ற காலை போலீஸ் படை வீரர்கள் ஆயுதபாணிகளாய் நின்று கொண்டிருந்தார்கள். அதிகார மிடுக்கு அப்படை வீரர்களிடையே நன்கு விளங்கியது. இதைக் கண்டு சத்தியாக்கிரகிகள் சிறிதேனும் பின் வாங்கினார்களோ? அகமரும்ப முகமலர்ச்சியுடன் சத்தியாக்கிரகிகள் சென்றார்கள். காந்தியெம்பெருமானின் ஆன்ம சக்தி சிறைக்கோட்டத்தோடு அடங்கி விடாதென்றும் அஃது உலகெங்கணும் வீசும் என்றும் நாம்பன்முறை கூறியுள்ளோம் அவ்வுண்மையை இப்பொழுது நேயர்கள் கண்டு கொள்வார்களாக. நாகபுரி போலீஸ் கமிஷனர், ஒரு தடை உத்தரவு பிறப்பித்து அது பதினேழாந் தேதி முதல் பதினைந்து நாட்கள் அமுலில் இருக்கும் என்று தெரிவித்த போதிலும் பதினெட்டாந் தேதியே, கொடி ஊர்வலம் சிவில்லைனுக்குள் தடுக்கப்படாமல் சென்றது. அதிகாரிகள் ஏன் இவ்வூர் வலத்தைத் தடுக்கவில்லை? சத்தியாக்கிரகத் தலைவர்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் சில சமாதானப் பேச்சுகள் நடைபெற்றதாகவும் அதன் பயனாகவே இந்தத் தடை உத்தரவு அமுலுக்குக் கொண்டு வரப்படவில்லை யென்றும் சிலர் கூறிக்கொள்ளக் கூடும். ஆனால் சத்தியாக்கிரகிகளின் மூலக் கொள்கை இங்கு அங்கீகரிக்கப்பட்டதா இல்லையா வென்பதையே அன்பர்கள் கவனிக்க வேண்டும். எல்லாராலும் எப்பொழுதும் உபயோகிக்கப்பட்டு வந்த குறித்த ஒரு பாதையில் சிலர் செல்லக் கூடாதென்று அரசாங்கத்தார் தடுத்தனர். அந்தச் 'சிலர்'—சத்தியாக்கிரகிகள்—இந்த உரிமை தங்களுக்கு உண்டென்று சாதித்தார்கள். கடைசியில் இந்த உரிமை அங்கீகரிக்கப்பட்டு விட்டது.

ஆனால் சுமார் ஆயிரத்தைந்நூறு பேரைச் சிறைக்கனுப்பி விட்டு, இதனை எங்ஙனம் வெற்றியென்று கூறுவதெனச் சிலர் கேட்கலாம். தான் கொண்ட நோக்கத்தையடைய எவனும் கஷ்டப்படாமலிருக்க முடியாது. அரிச்சந்திரன், எவ்வளவோ துன்பங்களை அநுபவித்தான்; தன் மனைவியையும் வாளால் வெட்டத் துணிந்தான். ஏன்? சத்தியத்தை நிலை நாட்டுவதற்காக. இவ்வளவு இன்னல்களடைந்து இச்சத்தியத்தைக் காப்பாற்றிவிட்டா லென்ன என்று கேட்பது எவ்வளவு அறியாமையோ அவ்வளவு அறியாமையே சத்தியாக்கிரகவெற்றியைப்பற்றிக்குறைகூறுவதும். பிரகலாதன், திருமாலின் திருநாமத்தைக் கூறத் தனக்கு உரிமை உண்டென்பதை நிலைநிறுத்துவதற்காகவே பல இடையூறுகளை ஏற்றுக் கொண்டான். வசிட்டனையும் வீட்டு மனையும் ஏகலைவனையும் ஈன்ற இந்தியாவில் சத்தியாக்கிரகம் வெற்றி பெற்றது ஆச்சரியமாகாது. ஆனால் அவ்வெற்றியைக் குறித்துச் சந்தேகிக்கும் கனவான்கள்-தேசிய வாதிகள்-ஒத்துழையாதார்கள் — இருப்பதைக் குறித்தே நாம் ஆச்சரியப்படுகிறோம்.

நாகபுரி சத்தியாக்கிரகம் வெற்றியுற்றதற்காக காந்தியடிகளை வாழ்த்துகிறோம். அவருடைய சக்திக்கு வணக்கஞ் செலுத்துகிறோம்.

## கெனியாவைப்பற்றிய அறிக்கை

கெனியா சம்பந்தமாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வெளியிட்ட அறிக்கையைப்பற்றித் தங்களுடைய அபிப்பிராயத்தை, இந்தியா அரசாங்கத்தார் இதுகாலை ஓர் அறிக்கையாக வழங்கியுள்ளார். "கண்டனத்துடன் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தீர்மானத்தை அங்கீகரித்துக் கொள்வோம்" என்று லார்ட் ரெடிங் கூறியதற்குப் பிறகும் லார்ட்ஸ் சபையில் இதுசம்பந்தமாகக் கேள்விகள் பிறந்த பிறகும் இந்த அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறதால் இதனுடைய நடையும் போக்குமே வேறு மாதிரியா யிருக்கின்றன வென்று கூறலாம். 'ஹிந்து' பத்திரிகையின் சிம்லா நிருபர் கூறுவதுபோல் இந்த அறிக்கையின் சாராம்சத்தைப் பின்வரும் வாக்கியங்களால் கூறி விடலாம். "கெனியா முடிவு பெரிய ஆசாபங்கத்தை விளைப்பதால் அதனைக் கண்டனத்துடன் ஒப்புக் கொள்வோம் என்று முன்னர் நாங்கள் கூறிய வார்த்தைகளைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறோம். நியாயமான ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்ற எண்ணம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இருக்கிற தென்பதை நாங்கள் அங்கீகரித்துக் கொள்கிறோம். ஆனால் இன்னும் அதிகமான உரிமைகள் வழங்கப்படவில்லையே யென்ற எங்கள் விசனத்தை இங்குத் தெரிவியாமலிருக்க முடியாது. உங்கள் (பிரிட்டிஷ் அரசாங்கத்தின்) தீர்மானத்தை நாங்கள் அங்கீகரிக்கிறோம். அதைப்பற்றி மறுபடியும் ஆலோசனை செய்ய வேண்டுமென்று இச்சமயத்தில் கேட்கவில்லை. ஆனால் சமயம் வந்தால் அதைப்பற்றி எங்கள் அபிப்பிராயத்தை எடுத்துக் கூற எங்களுக்கு உரிமையுண்டு". கெனியா முடிவைப்பற்றி இந்தியா அரசாங்கத்தார் கொண்டுள்ள அபிப்பிராயம் மேற்கண்ட வாக்கியங்களில் அடங்கியிருக்கின்றது.

கெனியா சம்பந்தமாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வெளியிட்ட அறிக்கையின் தத்துவத்தை இந்தியா அரசாங்கத்தார் சரியாக உணரவில்லை யென்று நாம் அஞ்சுகிறோம். கெனியா முடிவு, கெனியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போந்த ஐரோப்பியப் பிரதிநிதிக் கூட்டத்தின் தலைவரான லார்ட் தலாமேருக்குத் திருப்தியை அளித்திருக்கிறது. ஆனால் இந்தியாவிலிருந்தும் கெனியாவிலிருந்தும் சென்ற இந்தியப் பிரதிநிதிக் கூட்டத்தார் இம்முடிவுக்கு மகிழ்ச்சி கொள்ளவில்லை. பிரிட்டிஷ்பத்திரிகைகள் இம்முடிவை ஒரு முகமாக ஆதரித்தெழுதுகின்றன. இந்தியப் பத்திரிகைகள் ஒரு முகமாக இம்முடிவைக் கண்டித்து எழுதுகின்றன. இவைகளைக் கொண்டே தாங்கள் எந்நிலையில் நிற்க வேண்டுமென்பதை இந்தியா அரசாங்கத்தார் ஊகித்துக் கொள்ளலாம்.

இந்தியா அரசாங்கத்தார், தங்களுடைய கொள்கைகளை உறுதியாகவும் ஊக்கத்துடனும் ஆரம்ப முதல் எடுத்துக் கூறியிருப்பாராயின், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கம் சிறிது மாறுபட்டிருப்பினும்இருக்கலாம். இப்பொழுதும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முடிவைத் தாங்கள் அங்கீகரித்துக் கொள்வதாகவும் இச்சமயத்தில் இதைப்பற்றிய வாதத்தைத் தொடங்குவதில்லை யென்றும் கூறுவது விநோதமாகவே இருக்கிறது. இன்னும் அதிகமான உரிமைகள் அளிக்கப்பட்டிருக்கலாம் என்பதை இந்தியா அரசாங்கத்தார் அங்கீகரித்துக் கொள்கின்றனர். அங்ஙனமிருக்க, இந்த உரிமைகளை வாங்கிக் கொடுக்க இவர் ஏன் முயற்சி செய்யக்கூடாது?

## இடியேறு

### இருபத்தேழாந்தேதி

அடுத்த திங்கட்கிழமை, சுயமரியாதையுள்ள ஒவ்வோர் இந்தியரும் கவனிக்கவேண்டிய நாளாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் நாம் எந்நிலையிலிருக்கிறோம் என்பதை அந்நாளில் இந்தியர்கள் சிந்திக்கவேண்டும். காங்கிரஸ் கமிட்டியாரின் தீர்மானத்தை நேயர்கள் படித்திருப்பார்களாதலின், அன்று என்னசெய்ய வேண்டுமென்பதைப் பற்றி நாம் அதிகமாகக் கூறவேண்டியதில்லை. ஏகாதிபத்தியத்தில் இந்தியராகிய நாம் ஒதுக்கப்பட்ட சாதியாராக இருக்கிறோம். நமது சகோதரர்களின் உரிமைகள் வெளிநாடுகளில் குலைக்கப்படுகின்றன. இந்தியாவிலுள்ளவர்கள், அடுத்த திங்கட்கிழமை வெளிநாடுகளிலுள்ள தங்களுடைய சகோதரர்களை நினைத்தும், நீதி, தருமம் இவைகளைப் போற்றியும் விரதக்கொண்டாட்டம் கொண்டாடுவார்களாக.



### நமது வரதர்

தமிழ் நாட்டுத் திலகமாகிய டாக்டர் வரதராஜலு மதுரைச் சிறையினின்றும் திரிச்சி சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டாரென்று அறிகிறோம். டாக்டர் வரதராஜலு மதுரைச்சிறையில் அரும்பாடுபட்டதாகப் பத்திரிகைகளில் செய்திகள் கிளம்பின. நமது வரதராஜலு அரசியல் குற்றவாளி போல் நடத்தப்படவில்லையாம்; மற்றக் குற்றவாளிகள் போலவே நடத்தப்பட்டாராம். தமக்கேற்ற உணவின்றி உடையின்றி மாவரைக்குந் தொழிலாளியாய் டாக்டர் வரதராஜலு மதுரைச் சிறையில் நின்றாராம். அந்தோ! இதை எவரிடத்தில் முறையிடுவது? இன்னும் எத்துணைத் தேசபக்தர்கள் நாயுடு அவர்களைப் போல் வருந்துகிறார்களோ? ஆண்டவனே! அவர்களின்மீது கருணை பொழிய மாட்டாயோ?

### அரசியற் கைதிகள்

அரசியற் கைதிகளை விடுதலை செய்ய வேண்டுமென்று வங்காளச் சட்டசபையில் ஒருவர் ஒரு தீர்மானங் கொண்டுவந்தார். இவர் அரசியல் கைதிகளுள் ஒத்துழையாக் கைதிகளைப் பற்றியே பேசினர் என்று எவரும் தெரிந்துகொள்வர். ஆனால் இத்தீர்மானங்களை எதிர்த்த அரசாங்க அங்கத்தினர், தகுந்த காரணங்களைக் காட்டாமல் பழைய கதையை எடுத்துப்பேச ஆரம்பித்து விட்டார். கொலை, களவு முதலிய குற்றங்களைச்செய்த அரசியல் கைதிகளை விடுதலை செய்யவேண்டுமென்று எந்த அங்கத்தினரும் கேட்டிருக்கமாட்டார். அரசாங்க அங்கத்தினர், இத்தீர்மானத்தைக் கொண்டுவந்த அங்கத்தினர் நினைத்துள்ள அரசியற் கைதிகள் கொடுமைத்தொழிலை வெறுக்கிறார்களென்பதை அங்கீகரித்துக்கொள்கிறார். ஆனால் இச்சமயத்தில் அரசாங்கத்தின் பலத்தைக் குறைக்கக் கூடாதென்று கேட்டுக் கொள்கிறார். இந்த இரண்டு வாக்கியங்களைச் சுருக்கமாகக் கூறிவிட்டு இவர் தீர்மானத்தை எதிர்த்திருக்கலாம். அதை விடுத்து பழைய குப்பையை யெல்லாம் இவர் கிளறுவானேன்? இத்தீர்மானம் தோற்றுப் போய்விட்டது. ஒத்துழையாக் கைதிகள் சிறையில் அல்லற்பட்டுக் கொண்டிருக்க மிதவாதிகள் சம்மதித்திருக்கிறார்கள். வேறெந்தத்தொல்லைகளை நாம் கவனியாதிருந்த போதிலும் இந்த மிதவாதிகளின் தொல்லை பெருந் தொல்லையாக இருக்கிறது.

### இரண்டு சிங்கக்குட்டிகள்

சிங்கத்தின் வயிற்றில் பிறந்தது சிங்கக்குட்டியாக இராமல் கன்றுக்குட்டியாயிருக்குமோ? ஐர்லாந்தில் சமீபத்தில் கைதிசெய்யப்பட்ட ஸ்ரீமான் தவேலராவின் பன்னிரண்டு வயதுடைய குமாரன் இப்பொழுது போதமேடைகளில் நின்று அரசியல் பிரசங்கம் செய்கிறான் என்று அறிகிறோம். காஸ்கிரேவ் அரசாங்கத்தினரால் கொலைத்தண்டனைக்குள்ளாக்கப்பட்ட குடியரசுக்கட்சித் தலைவர்களுள் ஒருவரான ஸ்ரீமான் எர்ஸ்கைன் சைல்டர்ஸ் என்பவருடைய குமாரனும் இந்த அரசியல் இயக்கத்தில் சம்பந்தப்பட்டு உழைக்கிறான் என்று அறிகிறோம். இதைப் படித்ததும் எத்தகையவருக்கும் ஒரு புதிய உணர்ச்சி உண்டாகும். இந்தியாவில் காந்தியடிகள் சிறை சென்றதும் அவருடைய குமாரர்கள் தந்தையாருடைய வேலையில் ஈடுபட்டு உழைக்கிறார்கள். ஐர்லாந்தில் பன்னிரண்டு வயது சிறுவர்கள் சுதந்திர தாகத்தில் ஈடுபட்டுழைக்கிறார்கள். இந்தியாவில் இளைஞர்கள் என்ன செய்கிறார்கள்? அந்தோ! இளைஞர்களே!

### ஜர்மனியில் வாழ்க்கை

ஜர்மனியின் பொருளாதார நிலைமை சீர்கெட்டுப் போயிருப்பதாகத் தெரிகிறது. உணவுப் பொருள்களின் விலை விரைவாக ஏறி வருகிறது. ஒருடன் நிலக்கரியின் விலை எட்டரை கோடி மார்க்கென்று அறிவிக்கப்படுகிறது. அதாவது யுத்தத்திற்கு முன் இருந்த விலையைவிட ஒன்றுக்கு இருபது லட்சம் மடங்கு அதிகமான விலையில் நிலக்கரி விற்கிறது. ரேயில் சட்டணங்கள் முதலியவைகளும் உடை, உணவு முதலிய பொருள்களும் நாளுக்கு நாள் விலையேறிக்கொண்டு வருகின்றனவாம். இவைகளினால் ஜர்மனியின் பொருளாதார நிலைமை எத்தன்மையி லிருக்கிறது என்பது பெறப்படும். இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன? நஷ்டஈடு விஷயத்தில் பிரெஞ்சுக்காரர் அநுசரிக்கும் பிடிவாதமா? சென்ற வாரம் பிரிட்டிஷார் விடுத்த அறிக்கைக்குப் பிரெஞ்சுக்காரர் பதிலளித்திருக்கின்றனர். ரூர்பிரதேசத்தைத் தாங்கள் ஆக்ரமித்துக் கொண்டிருப்பது நியாயமென்றே இவர் சாதிக்கின்றனர். இதைப்பற்றி விவரமாகப் பின்னர் எழுதுவோம்.

### விளம்பரங்களினால் வருவாய்

இந்தியா அரசாங்கத்தார் தங்களுடைய வருவாய்க்கு அநேக விதமான வழிகளைக் கண்டு பிடிக்கின்றனர். இப்பொழுது தந்தி பாரங்களில் காலியாயுள்ள இடங்களில் விளம்பரம் போட்டு அதன் மூலமாகப் பணம் சம்பாதிக்கப் போகின்றனராம். இந்தப் புதிய பாரம் இன்னும் சில நாட்களில் வெளிவரும் என்று சொல்லப்படுகிறது. இந்தியா அரசாங்கத்தார் வரவுக்குத் தகுந்த செலவு செய்கின்றனரா? செலவுக்குத் தகுந்த வரவு பெறுகின்றனரா? என்பதே தற்போதைய கேள்வியா யிருக்கிறது.

# பெரு விண்ணப்பம்

## "நவசக்தி" மும்முறைப் பதிப்பு

### தமிழர்கள் ஆதரவு வேண்டும்

நமது 'நவசக்தி'யை மும்முறைப் பதிப்பாக்கவேண்டுமென்றும், தினப்பதிப்பாக்கவேண்டுமென்றும் சுமார் ஒன்பது மாதகாலமாகத் தமிழ் நாட்டு அன்பர் பலர் எனக்கு எழுதிக்கொண்டேயிருந்தனர். அது குறித்துச் சென்ற ஏப்ரல் மாதம் (20-4-23) 'சிறு விண்ணப்பம்' என்ற மகுடமிட்டு எனது கருத்தை (நவசக்தியில்) குறிப்பாக வெளியிட்டேன்.

சிறியேன் "தேசபக்தன்" ஆசிரிய பதவியினின்றும் விலகியபோது பொது ஜனங்கட்குச் செய்துகொண்ட விண்ணப்பத்தில்தினப்பதிப்புக்கு ரூ.50,000 மும், மும்முறைக்கு ரூ. 30,000 மும், வாரப் பதிப்புக்கு ரூ. 10,000 மும் வேண்டுமென்றும் குறிப்பித்திருந்தேன். அவ்விண்ணப்பத்தின் பயனாக எனக்குக் கிடைத்த தொகை ஆறாயிரத்துச் சில்லரையே. அதை முதலாக வைத்து 'நவசக்தி'யை வாரப்பதிப்பாக நடாத்தி வருகிறேன். தக்க முதல் வைத்தே பத்திரிகைகளை ஆரம்பித்தல் வேண்டும். தமிழ் நாட்டில் பல பத்திரிகைகள் இன்று தோன்றி நாளை அழிவுறுதற்குக் காரணம் போதிய முதலின்மையே யாகும். ரூ. 10,000-ம் கிடைத்திருந்தால் "நவசக்தி" வாரப்பதிப்பை இன்னுஞ் சிறப்பாக நடத்தியிருக்கக் கூடும்.

இப்பொழுது தினப்பதிப்புக்குப் போதிய முதல் கிடைத்தலரிதாகலான், வார மும்முறைப்பதிப்பாக வெளியிடும் முயற்சியில் தலைப்படலாமென்று கருதி இவ் விண்ணப்பஞ் செய்யலானேன். மும்முறைப் பதிப்புக்கும் போதியமுதல் வேண்டுமன்றோ?

மதுரையில் ஒரு முறை கூடிய தமிழ் நாட்டுக் காங்கரஸ் காரியக் கூட்டம், எனது பத்திரிகை வளர்ச்சிக்கு ரூ 10,000 கொடுக்க உத்தேசித்து, அத்தொகையை ஏற்றுக் கொள்ளுமாறு என்னை வலியுறுத்திற்று. பல காரணங்களை முன்னிட்டு அத்தொகையை ஏற்றுக் கொள்ளமறுத்து விட்டேன். அத்தொகை பின்னர் "சுயராஜ்ஜியா" கம்பெனிக்கு அளிக்கப்பட்டது. "சுயராஜ்ஜியா" கம்பெனி இன்னுந் தமிழ்ப் பத்திரிகை தொடங்கவில்லை. காரணம் எனக்குத் தெரியாது.

ஒரு தமிழ் தினப்பதிப்பைப் பேராவலோடு எதிர் பார்க்கும் தமிழ்நாட்டு அன்பர் பலர் "நவசக்தி"யைத் தினப்பதிப்பாக்க வேண்டுமென்றும், முடியாவிடின் மும்முறைப் பதிப்பாக்க வேண்டுமென்றும் எனக்குக் கடிதம் விடுத்துக் கொண்டேயிருக்கின்றனர். போதிய முதலின்றித் தினப் பதிப்பைத் தொடங்குவதனால், இடையில் பல முட்டுகள் நிகழ்வதை அநுபவத்தில் உணர்ந்துள்ளமையானும், தினப்பதிப்பு நடாத்த உடல்நிலை இப்பொழுது இடந்தாராதாகலானும் தினப்பதிப்பு (இப்பொழுது) நடாத்த இயலாமையைப் பெரிதும் வணக்கமாக அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்; சிறுமுதல் கிடைத்தால் இப்பொழுதுள்ள அச்சுக்கூடத்தையும் பிறவற்றையும் சிறிது பெருக்கி மும்முறைப்பதிப்பு ஒருவாறு நடத்தக் கூடுமென்பதையும் தமிழ் நாட்டவர்க்கு அறிவித்துக் கொள்கிறேன்.

மும்முறைக்கு முதல் சேர்ப்பது எப்படி? நாடோ பலதிற வரி (காங்கிரஸ் வரியும்) செலுத்திச் சலிப்புற்றுக் கிடக்கிறது. நேரே சென்று முயன்றால் உதவும் இயல்பு பெரிதுமுடையார் நமது நாட்டவர் என்பதை நான் செவ்வனே அறிவேன். [illegible] வலியுறுத்திப் பொருளீட்ட எனக்கு விருப்பமில்லை. அத்துறையில் இறங்கி உழைக்க எனது உடல்நிலையும் இடந்தாராது. குறிப்பறிந்து தாமே வலிந்து உதவும் நீர்மையுடையோர் துணையையே "நவசக்தி" எதிர் பார்க்கின்றாள் என்பதை நேயர்களுக்கு விரித்துரைக்க வேண்டுவதில்லை.

"நவசக்தி" மும்முறை வெளிவரல் வேண்டுமென்று கருதுஞ் செல்வர்கள் தங்களாலியன்ற பொருளுதவி செய்யலாம். "நவசக்தி" சந்தா நேயர்களுள் விருப்பமுடையோர் ஒரு வருட சந்தா (அதாவது ரூ. 5) "நவசக்தி"க்குச் சன்மானமாக வழங்கலாம். "நவசக்தி" சந்தாதாரர் ஒவ்வொருவரும் இவ்வுதவி புரிந்தால் "நவசக்தி" மும்முறை எளிதில் வெளியாகுமென்பதில் ஐயமில்லை. "நவசக்தி" வளர்ச்சிக்கு இது சிறந்த வழியன்றோ? சந்தா நேயர்கள் கவனிப்பார்களாக.

"நவசக்தி" மும்முறைப் பதிப்பு உதவிக்கு இன்னுமொரு வழி வியாபார முறையில் குறிப்பிடலாம். "நவசக்தி" மும்முறைப் பதிப்புக்கு வருட சந்தா உள்நாட்டுக்கு (இந்தியா) ரூ. 15-ம், சிங்கப்பூர், பினாங், நெட்டால் முதலிய வெளிநாடுகளுக்கு ரூ. 20-ம் விதிக்க உத்தேசம். அத்தொகையை முன் பணமாகச் செப்டம்பர் மாதம் பதினைந்தாந் தேதிக்குள் குறைந்தது 400 பேர் செலுத்தினால் மும்முறைப் பதிப்பு உடனே தொடங்கக் கூடும். முன் பணஞ் செலுத்துபவர்கட்கு முதல்வருட முழுவதும் வார மும்முறைப் பத்திரிகை அனுப்பிக் கடன் கழிக்கப்படும். பொருள் உதவி புரிய இயலாதோர்-ஒருவருட வாரப்பதிப்புச் சந்தா சன்மானமாக அளிக்க இயலாதோர்-வருட சந்தா செலுத்தவோ அல்லது செலுத்துமாறு பிற நேயர்களை அன்பு வழியில் தூண்டவோ முயன்று "நவசக்தி"யை வளர்க்கலாம்.

"நவசக்தி"யை மும்முறையாக்கும் பொறுப்பு என்பாலில்லை. அது நேயர்கள் பாலிருக்கிறது. நேயர்கள் முயன்றால் "நவசக்தி" மும்முறை வெளிவருவது நிச்சயம். "நவசக்தி" மும்முறைப் பதிப்புக்கு உதவ விருப்பமுடையோர் தத்தம் உதவியைச் செப்டம்பர் மாதம் பதினைந்தாந் தேதிக்குள் செய்ய முயல்வாராக. உதவி கிடைக்கும் உறுதி தோன்றினதும் மும்முறைப் பதிப்புக்கு வேண்டிய முயற்சி தொடங்கப்படும்.

மும்முறைப்பதிப்போடு வாரப்பதிப்பு வழக்கம்போல நடைபெற்று வரும். வாரப்பதிப்பு சந்தா நேயருள் எத்துணை பேர் மும்முறைப்பதிப்புச் சந்தா நேயராக விரும்புகிறார் என்பதையும் தெரிவிப்பாராக.

எனக்கு அடிக்கடி கடித மெழுதிக் கொண்டிருந்த நண்பர்கள் தங்களாலியன்ற வளவு முயன்றுழைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். "நவசக்தி"நேயர்கள் அனைவரும் ஒரு பத்து நாள் முயன்றால் போதும். முயற்சியால் ஆகாததென்னை?

"நவசக்தி" மும்முறைப் பதிப்புக்குச் சந்தாதாரராகச் சேர விரும்புவோர் தத்தம் விலாசத்தை மாத்திரம் தற்போது பதிவுசெய்து கொள்வாராக. ஆறுமாத சந்தா, மூன்றுமாத சந்தா, மாதசந்தா முதலிய விவரம் பின்னர்த் தெரிவிக்கப்படும்.

திரு. வி. கலியாண சுந்தரன்,
'நவசக்தி' ஆசிரியன்,
இராயப்பேட்டை, சென்னை.

### சென்னை நகரபரிபாலன சபை

சென்னை நகர பரிபாலன சபையார் இப்பொழுதே தங்களுடைய பேதமைக்குத் தக்கவாறு ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளார்கள். அது வருமாறு:—

"பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள சுயஆட்சி பெற்ற குடியேற்ற நாடுகளும் பிற குடியேற்ற நாடுகளும் சக்ரவர்த்தியின் குடி மக்களாகிய இந்தியர்களை அநியாயமாகவும் அவமானத்துடனும் நடத்துவதால்,

(1), அந்தக் குடியேற்ற நாடுகளில் பிறந்த இந்தியரல்லாதார் இனி ஏஜெண்டாகவாவது கண்டிராக்டராக வாவது ஊழியர்களாகவாவது இச்சபையால் நியமிக்கப்படக் கூடாது.

(2) அந்தக் குடியேற்ற நாடுகளில் பிறந்த இந்தியரல்லாத எவருக்கும் எந்தத் தொழிலைச் செய்வதற்கும் லைசென்ஸேனும் கொடுக்கக்கூடாது. சர்க்கஸ் கூட்டங்களும் இந்த விதிக்கு உட்பட்டனவே.

(3) அந்தக் குடியேற்ற நாடுகளில் பதிவுசெய்யப்பட்ட எந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனியிடத்திலும் நகரபரிபாலன சபைகளின் சொத்துக்களை இனி இன்ஷ்யூர் செய்யக்கூடாது.

(4) இந்தத் தீர்மானங்கள்படி கண்டிப்பாக நடக்க வேண்டுமென்று கமிஷனர் கேட்டுக் கொள்ளப்படுகிறார்; ஸ்டாண்டிங் கமிட்டிகளும் கேட்டுக் கொள்ளப் படுகின்றன".

இந்தத் தீர்மானம் நடை முறைக்குறிப்பில் கடைசியாக இருந்த போதிலும் அவசியமான தீர்மானமென்று கருதி இதனை முன்னரே வாதத்திற்குக் கொண்டு வந்தனர்.

### ஏகமனதாக நிறைவேறியது

முதலில் அங்கத்தினரிற்சிலர்இத்தீர்மானத்தைக் கண்டு அஞ்சினர். இஃது அரசியல்விஷயமென்றும்நகரபரிபாலனசபையில்இவ்விஷயத்தைக்கொண்டுவந்து புகுத்துவது பொருந்தாதென்றும் நகரசபைத் தலைவர் அபிப்பிராயப்பட்டார். மேற்கூறப்பட்ட தீர்மான விஷயம் அரசியல் சம்பந்தமானதன்று, இந்தியரின் சுயமரியாதையைப் பொறுத்தது. இந்தியக் குடிபாயும்ஒவ்வொருவரும் இத்தீர்மானத்தை ஆதரிக்கவேண்டும். இத்தீர்மானத்தைச் சென்னை நகரபரிபாலன சபையால் முதன் முதலாக நிறைவேற்றப்படவில்லை, பம்பாய் நகரபரிபாலன சபையாரும் இத்தகைய தீர்மானமொன்றை முன்னர் நிறைவேற்றியிருக்கிறார். ஆதலின், பம்பாய் நகரசபைத் தீர்மானத்தை முன் மாதிரியாக வைத்துக் கொண்டேனும் இத்தீர்மானத்தைப் பற்றி இவர்கள் முதலில் சந்தேகப்படாதிருக்கலாம். ஆனால் முடிவில் இத்தீர்மானம்ஏகமனதுடன் நிறைவேற்றப்பட்டதைக் குறித்து நாம் மகிழ்ச்சியடைகிறோம், தீர்மானத்தின் கருத்துக்களை ஆதரியாதவர்கள் வாக்குக் கொடாமல் மௌனமாயிருந்ததை நாம் பாராட்டுகிறோம்.

### நகரசபையின் கடமை

சென்னை நகர பரிபாலன சபை, இத்தீர்மானங்களை அமுலுக்குக் கொண்டு வருவதில் சிறிதும் பின் வாங்காதென்று எண்ணுகிறோம். இந்தியர்கள் குடியேற்ற நாடுகளில் நடத்தப்படுவதைப் போல் பிரிட்டிஷார் வேற்று நாடுகளில் நடத்தப்படுவாரானால் பின்னவர் என்செய்வார் என்பதை நாம் கூற வேண்டுவதில்லை. நகர பரிபாலன சபையின் ஐரோப்பிய அங்கத்தினர்கள், மேற்கூறப்பட்ட தீர்மானத்திற்குச்சாதகமாக வாக்குக் கொடாமல் இருந்ததைக் குறித்து நாம் வருந்துகிறோம். ஸ்ரீமான்கள் ஆண்ட்ரூஸ், போலக் முதலியோர் குடியேற்ற நாடுகளில் இந்தியர்கள் நடத்தப்படுவதைக் குறித்து ஆழ்ந்த வருத்தமடைந்திருக்கிறார்கள். சென்னை நகர பரிபாலன சபையின் ஐரோப்பிய அங்கத்தினர்களும் கிறிஸ்தவ மதத்தையே அநுசரிக்கிறார்கள் என்று கருதுகிறோம்.

### "சுதேசி"

இப்பெயர் வாய்ந்த பத்திரிகை யொன்று வரப்பெற்றோம். இது வாரம் இருமுறைப் பதிப்பாக வெளிவருவதென்று அதன் கண் குறிக்கப்பட்டிருக்கிறது. சுதேசியின் ஆசிரியர் ஸ்ரீமான். பி. கோதண்டராம ஐயர் எம். ஏ, பி. எல். இவரைப்பற்றித் தமிழ் நாட்டவர்க்கு விரித்துக்கூற வேண்டுவதில்லை. இவர் இளைஞர்; ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்து தேசத்தொண்டு செய்ததன் பயனாக ஓராண்டு சிறையில் உறையும் பேறு பெற்றவர். பொறுமையாளர்; குணநலமுடையார். இப்பெரியார் மீண்டும் எத்தகை அடிமைத் தொழிலுக்கும் போதலாகாதென்று உறுதிகொண்டு இப்பத்திரிகையைத் தொடங்கியுள்ளார். 'சுதேசி' என்னும் பெயருக்கேற்ப ஆசிரியர் அதன் வாயிலாக நாட்டில் தற்போது வேண்டற்பாலதாய சுதேச உணர்வை எழுப்புவாரென்று நம்புகிறோம். நல்லாசிரியரைக் கொண்ட 'சுதேசி'க்கு நாம் நல்வரவு கூறுகிறோம். சுதேசி வெளியாகுமிடம், அம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை. வருஷசந்தா ரூ 5. தமிழ் நாட்டார் [illegible]

## புத்தர் படம்.

புத்தர் படங்களை சினிமா காட்சிச் சாலைகளில் காட்டக்கூடாதென்று இரங்கூன் அதிகாரிகள் தடுத்திருப்பதாகச் சின்னாட்களுக்கு முன் ஒரு செய்தி பத்திரிகைகளுக்குக் கிடைத்தது. எவ்வித காரணமும் காட்டாமல் இத்தகைய செய்திகளை திடீரென்று அசோசியேடெட் பிரஸ் ஏஜென்சியார் அனுப்புவது தவறு. இச்செய்தியை நோக்கினால் அதிகாரிகளே இப்படங்களைத் தடுத்திருக்கிறார்களென்று ஜனங்கள் ஊகித்துக்கொள்வார்கள். நாமும் அங்ஙனமே ஊகித்தோம். ஆனால் பௌத்தர்களுடைய வேண்டுகோளின்படியே இந்தப் படம் நிறுத்தப்பட்டதாக அறிகிறோம். இதுசம்பந்தமாக "தேசோபகாரி" வெளியிட்டிருக்கும்விவரத்தை மற்றோருபக்கத்தியில் வெளியிட்டிருக்கிறோம்.

## மிதவாதிகளின் மனோநிலை

மிதவாதிகளின் மனோநிலை இன்னதென்று நம்மால் அறியக்கூடவில்லை. ஆனால் அவர்களுக்கு மனம் என்பது இருக்கிறதாவென்பது இப்பொழுது சந்தேகத்துக்கிடமாக இருக்கிறது. கேனியா முடிவை வங்காள மாகாண மந்திரியான ஸ்ரீமான் சுரேந்திரநாத் பானர்ஜியும் கண்டித்திருக்கிறார். பிரிட்டிஷ் பொருட்காட்சியை இந்தியா பகிஷ்கரிக்கவேண்டுமென்று மிதவாதிகளே தீர்மானித்திருக்கிறார்கள். ஆனால் வங்காளச் சட்டசபையார், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் பொருட்காட்சியை உத்தேசித்து வங்காளத்தில் நடக்கும் பொருட்காட்சிக்கு 15,700 ரூபாய் செலவழிக்க அநுமதி கொடுத்திருக்கின்றனர். அரசாங்க அங்கத்தினர் ஒருவர் இத்தீர்மானத்தைக் கொண்டுவர, இதற்குச் சாதகமாக ஐம்பத்திரண்டு பேரும் விரோதமாக இருபத்திரண்டுபேரும் வாக்குக் கொடுத்தனர். பிரிட்டிஷ் பொருட்காட்சியைப் பகிஷ்கரிப்பதனால் எவ்வித நன்மையும் உண்டாகாதென்று இந்த ஐம்பத்திரண்டு சகோதரர்களும் நினைக்கிறார்களா? ஸ்ரீமான் பானர்ஜி இத்தீர்மானத்திற்கு எவ்விதமாக வாக்குக் கொடுத்தார்? மிதவாதிகளின் மனப்பான்மை சாலவும் நன்றாயிருக்கிறது!

## வேண்டுவது அதுவே

பம்பாய்ச் சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழா சமீபத்தில் நடைபெற்றபோது கவர்னர் ஸர் ஜார்ஜ் லாயிட் கூறியுள்ள மொழிகளில் ஒரு பாகம் வருமாறு:—

"இந்தியாவில் இப்பொழுது வேண்டப்படுவது ஒற்றுமையே. இப்பொழுதுள்ள வேற்றுமைகள் இருக்கும்வரை இந்தியா ஒரு சமூகமாயிருக்க முடியாது. இந்தியாவின் பாமர ஜனங்களுக்கு (அரசியல்?) அறிவு புகட்டுவதே இப்பொழுது முக்கியமாகச் செய்யவேண்டிய காரியம்."

இவ்வுரைகளைத் தேசியவாதிகள் கவனிக்கவேண்டும். பாமர ஜனங்களைத் தட்டியெழுப்பிய பெருமை காந்தியடிகளுக்கே உரியது. பாமர ஜனங்களுக்குப் போதிய பயிற்சி கொடுக்க வேண்டுமென விரும்பும் அரசாங்கத்தாரே அவரைச் சிறையில் வைத்திருக்கிறார். இது விநோதமாக இல்லையா?

### நன்னிலத்தில் தொண்டர்கள் விடுதலை

நன்னிலத்தில் தேசியக் கொடியைப் பிடித்துக்கொண்டு பொது ரஸ்தாவில் போக்குவரத்துக்கு இடைஞ்சல் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு மாஜிஸ்டிரேட்டால் ஒருவாரம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட ஆறு தொண்டர்களும் ஆகஸ்டு மாதம் 20-ந் தேதி காலையில் நன்னிலம் சப் ஜெயிலிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர். அவர்களை நன்னிலம் வாசிகளும் கும்பகோணத்திலிருந்து வந்த தொண்டர்களும் நன்கு வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். அன்று மாலையில் நடந்த பொதுக் கூட்டத்தில் அந்தத் தொண்டர்கள் பாராட்டப்பட்டார்கள்.

---

சீனாவிலுள்ள தாசோகிப் எனுமிடத்தைச் சில சீனகள்ளர்கள் தாக்கி, அந்நியர்கள் வசிக்கும்படியான பகுதியிலுள்ள லண்டன் மிஷன் ஆஸ்பத்திரியையும் சத்தோலிக்கர்களின் மாதாகோயிலையும் கொளுத்திவிட்டு நகரத்தைக் கொள்ளையடித்தார்கள். நகரத்திலுள்ள பெரும்பாலான வீடுகள் கொளுத்தப்பட்டுப் போய்விட்டன. படையைச்சேர்ந்த எண்மர் திருடர்களால் கொல்லப்பட்டார்கள். மொத்தத்தில் இருநூறுபேர் திருடர் கையில் சிக்குண்டார்கள்.

* * *

இம்மாதம் 17-ந் தேதியில் லட்சுமணபுரியில் நடைபெற்ற கூட்டத்தில் பேசுகையில் பண்டித மோதிலால் நேரு, முகம்மதியர்களும் இந்துக்களும் கூடிய கமிட்டி ஒன்று நியமிக்கப்பட வேண்டுமென்றும் இவ்வங்கத்தினர்கள் எல்லோ அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாய் இருக்க வேண்டுமென்றும் இக்கூட்டத்தார் அரசியல் விஷயமாக இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துவைக்க வேண்டுமென்றும் இங்ஙனம் நடைபெற்றால் அவ்வவ்விடங்களில் ஹிந்து முஸ்லீம் சச்சரவுகளை ஒழிக்கக் கூடுமென்றுங் கூறினார்.

## நாகபுரி கொடிப்போராட்டம்

### முடிவெய்தியது

ஹிந்து பத்திரிகைக்கு ஒரு நிருபர் பின்வருமாறு எழுதுகிறார்.

சிவில்லைன்களுக்குள் தேசியக் கொடியைத் தாங்கிச் செல்லக் கூடாதென்று 144-வது பிரிவுபடி நாகபுரி அதிகாரிகளால் பிறப்பிக்கப்பட்ட உத்திரவு 17-ந் தேதியில் முடிவடைவதாய் இருக்கவே ஸ்ரீமான் வல்லபாய் பேட்டல், 17-ந்தேதியில்தொண்டர்கள் தேசியக் கொடியைத் தாங்கி சிவில்லைன்களுக்குள் செல்வார்களென்று விளம்பரஞ் செய்திருந்தார். எவ்வழியாய் ஊர்வலம் செல்வது என்பதைப் பற்றியும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அதே சந்தர்ப்பத்தில் ஜில்லா போலீஸ் சூபரின்டென்டண்டின் கையெழுத்தின் கீழ் சிவில் லைன்களுக்குள் உத்திரவின்றி எத்தகைய ஊர்வலமும் செல்லக்கூடாதென்று போலீஸ் சட்டத்தின் 30-வது பிரிவுபடி ஓர் உத்திரவு பிறப்பிக்கப்பட்டு எல்லாருக்கும் சேர்விக்கப்பட்டது. இப்படியிருந்தும் காந்திதினம் 18-ந் தேதியில் வருகிறபடியால் ஊர்வலத்தை முன் குறிப்பிட்டபடி ஐந்து தொண்டர்களுடனல்லாமல் நூறு தொண்டர்களுடன் நடத்த வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. இதைத் தவிர முன் செய்த ஏற்பாட்டில் ஒருவித மாறுதலுஞ் செய்யப்படவில்லை. இதன்படி 18-ந் தேதியில் பண்டித மகன்லால்ஜி சதுர்வேதியின் தலைமையில் சுமார் 63 தொண்டர்கள் வெள்ளைக் கதரை அணிந்து சொண்டும் சிகப்பு பச்சை வெள்ளை நிறங்களுடன் கூடிய தேசியக் கொடியைக் காற்றில் பறக்க விட்டுக்கொண்டுஞ் சென்ற காட்சியானது வியப்பைத் தந்தது. இன்னும் இக்கொடியானது காற்றில் பறக்கும்போது அது தொண்டர்களிடையும் இவ்வூர்வலத்தைப் பார்க்கச் சாலையில் நின்றுகொண்டிருந்தவர் உள்ளத்திலும் எழுப்பிய உணர்ச்சி சொல்லத்தரமானதல்ல. தொண்டர்களுடன் கூட்டத்தார் தடுக்கப்பட்ட எல்லைக்குள் செல்லக்கூடாது என்று காங்கிரஸ் தொண்டர்கள் கூறியதை மதித்து கூட்டத்தார் சாண்டாவராவதியண்டையில் நின்றுவிட்டது ஆச்சரியப்படத் தக்க விஷயமே. ஊர்வலத்தின் முன்னிலையில் அகோட்காரும் அபிமன்யுவும் (இவர் தான் கடந்த ஏப்ரல் 13-ந் தேதியில் போலீஸாரின் மறக்கருணைக்குப் பாத்திரமானவர்.) தேசிய கீதங்களைப் பாடிக்கொண்டு சென்றார்கள். ஊர்வலத்துடன் ஸ்ரீமான்கள் வல்லபாய் பேட்டல், இராஜேந்திர பிரசாத், சங்கர்லால் பாரிகா, ஸ்ரீமதிசுபத்திராதேவி, ஸ்ரீமான் வாசுதேவராஜா முதலியோர் சென்றார்கள். ஊர்வலம் வராவதியைத் தாண்டியது. அவ்விடத்தில் ஐம்பது போலீஸ்காரர்கள் கையில் தடிகளைத் தாங்கிக்கொண்டு இருந்தார்கள். இவர்களல்லாமல் நான்கு சப்இன்ஸ்பெக்டர்களும் இருந்தார்கள். இதைக் கண்டதும் ஜனங்கள் என்ன நடக்குமோவென்று தியக்கங்கொண்டிருந்தார்கள். ஊர்வலமானது மெல்ல மெல்லத் தடுக்கப்பட்ட எல்லையை நெருங்கிக்கொண்டிருந்தது. வழிமுழுமையிலும் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்களும் கான்ஸ்டேபில்களும் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். ஊர்வலம் கிறிஸ்தவர்கள் மாதா கோயிலை அடைந்தபோது ஜில்லா போலீஸ் சூபரின்டென்டண்ட் ஸ்ரீமான் சதுர்வேதியைப் பார்த்துத் "தாங்கள் வாத்தியத்தை நிறுத்தி விட்டுக் கோயிலைக் கனம் பண்ணுவீரா?" என்று கேட்டார். "மிக்க சந்தோஷம், அப்படியே செய்கிறேன்" என்று சதுர்வேதி கூறினார். கோயிலைத் தாண்டிப்போகும் வரை வாத்தியம் நிறுத்தப்பட்டிருந்தது. ஐரோப்பியஆண்களும் பெண்களும் குழந்தைகளும் ஊர்வலத்தைக் கவனித்துக் கொண்டுவந்தார்கள்.

கோயிலை விட்டுத் தாண்டியவுடன் ஊர்வலமானது சாதர்பசாருக்குச் சென்றது. அது தடுக்கப்பட்ட எல்லைக்குப்புறத்தே இருக்கிறது. இங்கு வந்தவுடன் போலீஸார் ஊர்வலத்தைத் தனியாய்விட்டு விட்டுச் சென்றுவிட்டார்கள். ஊர்வலமும் முன் சங்கேதப்படி சாதர்பசாரில் கலந்து விட்டது. இதைக் கேள்வியுற்றவர்களும் கண்டவர்களுமான நகரவாசிகள் கடந்த மூன்று மாதம் பதினெட்டு நாட்களாய் நடந்துவந்த சத்தியாக்கிரகம் வெற்றியுற்றதாகச் சந்தோஷித்தார்கள். மாலையில் டவுன்ஹால் காம்பவுண்டுக்குள் ஒரு கூட்டம் நடந்தது. அக்கூட்டத்தில் ஸ்ரீவல்லபாய் பேட்டல் சத்தியாக்கிரக முடிவைப் பற்றிக் கூறினார், பாபு இராஜேந்திர பிரசாத்சத்தியாக்கிரகத்தின் நுணுக்கத்தைப் பற்றியும் தாங்கள் அடைந்த வெற்றியைப் பற்றியும் கூறினார். பண்டித மகன்லால் சதுர்வேதி தொண்டர்களுக்கு வந்தன மளித்தார்.

மேற்படி ஊர்வலம் தடைசெய்யப்படாமல் நடந்தேறியதைப்பற்றி ஸ்ரீமான் வி.ஜே. பேட்டல் ஓர் அறிக்கையில் கூறுவதாவது:—

ஊர்வலம் போலீஸாரால் எங்கும் தடுக்கப்படவில்லை. இதனால் தேசியக் கொடியின் கௌரவம் நிலைநிறுத்தப்பட்டு விட்டது; போதச்சாலைகளின் வழியாய் ஒழுங்காகவும் அமைதியாகவும் ஊர்வலங்களை நடத்த உரிமை உண்டென்பதும் வெளிப்பட்டு விட்டது. இது, உண்மை, தியாகம், கஷ்டத்தைச் சகித்தல் ஆகிய இவை இறுதியில் வெற்றியுறும் என்பதைக் காட்டுகிறது. மகாத்மா காந்தியின் உபதேசப்படி, நாகபுரி சத்தியாக்கிரகப் போராட்டம் மகாத்மா காந்தி சிறை சென்றதினத்தில்முடிவடைந்தமைக்காககான் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். அநேக மாகாணங்களினின்று போந்த தொண்டர்களுக்கும் என் நன்றியைச் செலுத்துகிறேன். சத்தியாக்கிரகக் கொடிப் போராட்டத்தில் சம்பந்தப்பட்டு அதன் பயனாய் சிறை வாசம் அநுபவித்தும் அநுபவித்து வருகிறவர்களுமான தொண்டர்களுக்கும் என் நன்றியறிதலைச் செலுத்துகிறேன். நாகபுரி சத்தியாக்கிரகத்திற்கு உதவி புரிந்த எல்லாருக்கும் நான் நன்றியறிதலுள்ளவனாய் இருக்கிறேன். இன்றுடன் சத்தியாக்கிரகம் முடிவடைந்தது.

இம்மாதம் 18-ந் தேதி இரவில் சுயராஜ்யக் கட்சியின் ஆதரவில் நாகபுரியில் ஒரு கூட்டம் ஸ்ரீமதி சரோஜனிதேவி தலைமையில் நடந்தது. அக்கூட்டத்தில் ஸ்ரீமான் வி.ஜே. பேட்டல் பேசியதன் சுருக்கம்வருமாறு:—மகாத்மா காந்தியை விடுவிப்பதுதான் தேசமக்களின் முக்கிய கடமையாய் இருக்கவேண்டும். மகாத்மா காந்தியின் வழியைக் கடைப்பற்றிய தனால்தான் நாகபுரி சத்தியாக்கிரகம் வெற்றியடைந்தது. ஸ்ரீமான் ஜம்னாலால் சிறை சென்றதற்குப் பின்னரும் நாகபுரிவாசிகள் விடாது கொடிப் போரை நடத்திக் கொண்டு வந்தார்கள். மத்தியமாகாண சட்டசபையினர் தடை உத்தரவை நீக்கவேண்டுமென்றும் கைதிசெய்யப் படுவதை நிறுத்த வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் கொண்டுவந்து நிறைவேற்றினர். இத்தீர்மானம் 24 மணி நேரத்திற்குள் அமுலுக்குக் கொண்டுவரப்படாவிட்டால் தாங்களே கொடிபிடித்துச் செல்வதாக இவர்கள் என்னிடத்தில் கூறினார்கள். ஆனால் அதற்குப் பதிலாக, மறுநாளே சத்தியாக்கிரகக் கைதிகளுக்கு சிறைச்சாலையில் இடம் வேண்டுகைக்காக ஒரு லட்சம் ரூபா வேண்டுமென்று அரசாங்கத்தார் கேட்க அதற்கு அநுமதி கொடுத்தார்கள். நானும் என்னுடைய சகோதரரும் கவர்னரின் விருப்பத்திற்கிணங்க அவரைச் சென்று பார்வையிட்டு தேசீயக் கொடி, யூனியன் ஜாக்கை அவமதிப்பதற்கல்லவென்றும் அக்கொடியில் இருக்கப்பட்ட வெள்ளை நிறம் சிறுபான்மையோர் காப்பாற்றப்படுவர் என்பதைக் காட்டுகிறதென்றும் கூறினோம். போலீஸார் உத்திரவின்றி ஊர்வலம் நடத்தக் கூடாதென்று பிறப்பித்த சட்டவை நியாய விரோதமானதாகும். இதை மீறுவதற்காக நூறு தொண்டர்கள் கூடிய ஊர்வலம் தடுக்கப்பட்ட எல்லைக்குள்சென்றது. அது தடுக்கப்படாமற் போகவே சத்தியாக்கிரகம் முடிவடைந்தது. சேத் ஜம்னாலால் முதலியோர் இன்னும் ஒருவாரத்தில் விடுதலையடைவார்கள்.

### தமிழ்நாட்டுத் தொண்டர்கள்

**சிறையில் எங்ஙனம் நடத்தப்பட்டார்கள்?**

தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியான ஸ்ரீமான் இராமநாதன் தெரிவித்திருப்பதில் பின்வரும்விஷயங்கள் காணப்படுகின்றன:— ஸ்ரீமான் இ. க்னேஷியஸ் வார்தா சிறையினின்று ஈயோத்மால் சிறைக்கு 17-ந் தேதியில் மாற்றப்பட்டுள்ளார். அவர் ஒரு நிருபரிடம், தமிழ்நாட்டினின்று சென்ற தொண்டர்கள் சிறையில் எங்ஙனம் நடத்தப்படுகிறார்கள் என்பதைப் பற்றிக் கூறியதாவது:—

ஸ்ரீமான்கள் வரதாச்சாரியார், சுப்பிரமணியம், ஈஸ்வரன் ஆகிய இவர்கள் எச் சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்களென்பது தெரியவில்லை. மற்றவர்கள் வார்தா சிறையில் இருக்கிறார்கள். சிறைச்சாலை விதிகளுக்கு மீறிநடப்பவர்களுக்குத் தலைவராய் இருக்கிறோமென்று கருதப்பட்டு இங்ஙனம் வேறு சிறைகளுக்கு மாற்றப்பட்டோம். மத்திய மாகாண சிறையில் சில விஷயங்களில் அரசியற் கைதிகள் மிகக்கேவலமாக நடத்தப்படுகிறார்கள். எங்களில் அநேகர் தேக எடையில் குறைவடைந்துவிட்டிருக்கின்றனர், நானும் சுப்பிரமணியமும் எடையில் பதினைந்து பவுனுக்குக் குறைந்து விட்டிருக்கிறோம். சுப்பிரமணியம் இன்னுஞ் சிகிச்சைச் சாலையிலிருந்து வருகிறார். சப்ஜெயில்களில் சிறைச்சாலை சூபரின்டென்டண்டிற்கு மரியாதை செய்யும் முறை மிகவும் இழிவானதாய் இருக்கிறது. எங்களில் அனைவருக்கும் கைவிலங்குகளும் கோணி ஆடைகளும், தனிக்காவல் தண்டனைகளும் விதிக்கப்பட்டன, தினமொன்றுக்கு 25 பவுன் கிறைக்குச் சோளம் அரைக்கவேண்டுமென்று எனக்குக் கட்டளையிடப்பட்டது. எனக்கல்லாமல் ஸ்ரீமான்கள் சுப்பிரமணியன், ஈஸ்வரன், வரதாச்சாரியார் ஆகிய இவர்களுக்கும் இவ்வேலைகொடுக்கப்பட்டது. இத்தகைய வேலையைப் பலசாலிகளே செய்யக் கூடுமாகையால் எங்களில் ஒருவரும் 10½ பவுனுக்கு மேல் செய்யக்கூடவில்லை. இத்துடன்கூட கல் உடைக்கும்வேலையும் கொடுக்கப்பட்டது. இவையெல்லாம் செய்ததற்குக் காரணம் நாங்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்வோம் என்பதாகும். என்னைத் தனியாய்ப் பிரித்துவிட்டாலும் நான் இறுதிவரை போராடியே தீருவேன்.

---

இம்மாதம் 17-ந் தேதியில் கூடிய அலகாபாத் நகரபரிபாலன சபையார் டாக்டர் கிச்லுவின் விடுதலையைப் பாராட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளார்கள். லாலா லஜபதியின் விடுதலையைக் குறித்தும் அவர் சீக்கிரம் குணமடைய வேண்டுமென்பதைக் குறித்தும் ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

## செய்தித் திரட்டு

காந்தி சிறை நண்ணிய தினம் இம்மாதம் 18-ந் தேதியில் இந்தியாவெங்கும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

* * *

பாரசிகத்திலுள்ள சில இடங்களில் சமீபத்தில்ஏற்பட்ட வெள்ளப் பெருக்கினால் ஆமோடுகளுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது.

* * *

சமீபத்தில் பிரான்சின் கடற்கரையோரமான காடுகளில் ஏற்பட்ட தீவிபத்தின் பயனாய் 200 லட்சம் பிராங்குகளுக்கு நஷ்டமேற்பட்டது.

* * *

மாஸ்கோவில் 200 ஏக்கர் விஸ்தீர்ணமுள்ள நிலத்தில் தொழிற் காட்சி நடைபெறுகிறது. 250 அந்நிய நாட்டு கம்பெனிகள் இதில் கலந்திருக்கின்றன.

* * *

திருப்பதி நகரபரிபாலன சபையார் கதர் கிடங்கொன்றை வைத்து அதன் மூலமாய்க் கதரை விருத்தியாக்க 600 ரூபா பிரத்தியேகப் படுத்தியுள்ளார்கள்.

* * *

அமெரிக்காவிலுள்ள புருக்லைன் பட்டினத்திலுள்ள ஒரு நாடகக் கொட்டகையில் தீவிபத்துண்டாகி அதன் பயனாய் அநேக நெருப்பணைப் போர்கள் அமிழ்ந்திவிட்டார்கள்.

* * *

இந்திய இராஜப் பிரதிநிதி வருகிற டிசம்பரில் சென்னைக்கு விஜயமாகும் காலை அன்னாருக்குச் சென்னை நகரபரிபாலன சபையினரால் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்படும்.

* * *

இம்மாதம் 19-ந் தேதியில் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்று சேர்ந்து மீரத்தில் ஊர்வலம் ஒன்றை நடத்தினார்கள். இதன்படி மீரட்டின் நிலை கவலைக்கிடமானதாய் இல்லையென்று தெரிகிறது.

* * *

மகாராஷ்டிர காங்கிரஸ் கமிட்டியாரும், ஐக்ய மாகாண காங்கிரஸ் கமிட்டியாரும், மத்ய மாகாண காங்கிரஸ் கமிட்டியாரும் மௌலானா முகமதலியைக் காகினாடா காங்கிரசின் தலைவராய்த் தெரிந்தெடுத்துள்ளார்கள்.

* * *

பம்பாயில் ஸ்ரீமான் ஜெ. பி. பெடிட் தலைமையில் இந்தியன் டெயிலி மெயில் என்ற ஒரு பத்திரிகை வருகிற நவம்பர் மாதத்தில் ஆரம்பிக்கப்படும். இப்பத்திரிகை மிதவாதக் கொள்கைகளைக் கடைப்பிடித்து நிற்கும்.

* * *

மதுரை தலைய குளம் கோயிலுக்குக் கிழக்குப் பாரிசத்திலுள்ள மண் குடிசைகள் சென்ற 19-ந் தேதியில் தீ விபத்துக்குள்ளாயின. இதன் பயனாய் முப்பத்தைந்து வீடுகளும் ஐந்தல்லது ஆறு வைக்கோற்போர்களும் நாசமாயின.

* * *

பெரிய குளம் தாலுக்கா பண்ணைபுரம் கிராம காங்கிஸ் காரியதரிசியான ஸ்ரீமான் போதி வீரய்ய கவுண்டர் இம்மாதம் 15-ந் தேதியில் இ. பு. கோ 341,426-வது பிரிவுகளின்படி கைது செய்யப்பட்டு 3 மாத காவல் தண்டனையும் 100 ரூபா அபராதமும் விதிக்கப்பட்டார்.

* * *

இம்மாதம் 15-ந் தேதியில் திண்டுக்கல் வாசிகள் டவுன் கோட்டைக் குளத்தினருகில் கூட்டங்கூடி, விநாயகர் நாகர் முதலியவர்களின் விக்கிரகங்கள் சென்ற ஆடி 18-ந் தேதியில் உடைக்கப்பட்டதைக் கண்டித்துப் பேசப்பட்டது என்று திண்டுக்கல்லிருந்து ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

* * *

பம்பாய் மாசினா ஆஸ்பத்திரியைச் சேர்ந்த டாக்டர் நாதர்ஷா தாதாபாய் ஆங்கிலசரி பூனாவில் மோட்டார் சைகிளில் சென்று கொண்டிருந்தார். மோட்டார் சைகிலானது வெல்லஸ்லி வாராவதியின் மீது மோதுண்டு சின்னாபின்னப்பட்டது. இவர் அச்சம்பவம் நடந்தேறிய பத்து நிமிடங்களுக்கெல்லாம் காயத்தின் பயனாய் உயிர்துறந்தார்.

* * *

பீஹார் ஒரிஸ்ஸா சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான் நாராயண சின்னா இனி கூடவிருக்கும் சட்டசபைக் கூட்டத்தில், அரசாங்கத்தார் ஏகாதிபத்யப் பொருட்காட்சியில் சம்பந்தப்படக் கூடாதென்றும் அவ்விஷயம் சம்பந்தமாக இன்னும் பணஞ் செலவழிக்கக் கூடாதென்றும் சிறைச்சாலைகளில் கைதிகளுக்குச் சவுக்கடி கொடுக்கக் கூடாதென்றும் இரண்டு தீர்மானங்கள் கொண்டுவருவார்.



## விசேஷ காங்கிரஸ்

### ஒழுங்கான வழி காட்டவேண்டும்

இம்மாதம் 16-ந் தேதியில் வெளியான 'யங் இந்தியா' பத்திரிகையில் விசேஷ காங்கிரஸைப் பற்றிப் பின்வரும் விஷயங்கள் காணப்படுகின்றன:—

விசேஷ காங்கிரஸ் கவனிக்க வேண்டிய விஷயம், காங்கிரஸ் செய்கையில் காரியங்களை நடத்திக்கொண்டு போகுமா அல்லது அமைப்பளவோடு நின்று விடுமா என்பதேயாகும்.

சுயராஜ்யக் கட்சியார் தாங்கொண்டுள்ள திட்டத்தில் அமைப்பைத் தான் பெரிதாகக் கொண்டுள்ளார்கள். அவர்களுடைய அரசியலுக்கும் பார்லிமெண்டரி அரசியலுக்கும் சிறிதும் வித்தியாசம் கிடையாது. அமைப்பின் முக்கியமானதாய் உள்ள சமத்துவத்தை அடைவதற்காக ஒத்துழையாமையை மேற்கொள்ள வேண்டியதாகிறது.

சட்டசபைகளில் கொண்டு வரப்படும் தீர்மானங்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் குந்தகம் உண்டாக்கிச் சுதந்திரம் அடையக்கூடுமென்று சுயராஜ்யக் கட்சியினர் கூறுகின்றனர். அங்ஙனம் செய்தல் இயலாத காரியமென்று நாம் கூறுகின்றோம். ஓர் இனமாகவும் ஒரு ஜனக் கட்டுப்பாடாகவும் ஆங்கிலேயர்களும் நாமும் சரிசமமான நிலையிலில்லை. தேசமக்களைச் செவ்வையாய் ஒழுங்கு படுத்திக் கட்டுப் பாட்டிற்கு உள்ளாக்கித் தைரியசாலிகளாய்ச்செய்து விட்டால் நாம் சமத்துவத்தை அடைவோம். நமக்குண்டாகும் கெடுதல்களுக்கெல்லாம் காரணம் காங்கிரஸ்காரர்கள் தைரியசாலிகளாகவும் ஒழுங்கைக் கடைப்பிடிக்கிறவர்களாகவும் இல்லாமல் இருப்பதேயாகும். அவைகள் ஜனங்களிடை உண்டாக்கப் படுபட வேணடும். சட்டசபைக்குப் போவோர்கள் அதிகமாய்க் காரியங்களைச் செய்து விடுவார்களென்று எண்ணுதல் கானலைக் கண்டு தியங்குவதை ஒக்கும்.

சட்டசபைப் பிரவேசம் பகிஷ்காரம் ஆகிய இவை விஷயமாய் முரண்பாடான அபிப்பிராயபேத முடையவர்கள் இருந்து வருகிறார்கள். ஒவ்வொருவரும் தங்கட்சியை ஸ்தாபிக்கவேண்டியதற் குரியவைகளையெல்லாம் சொல்லி ஆய்விட்டது. ஆகவே ஒவ்வொருவரும் தமக்கு உண்மையென்று தோன்றுவதைக் கடைப்பிடித்து அதன்படி நடத்தல் உசிதமாம்.

ஆனால் இப்போது ஏற்றப்பட்டிருக்கும் சச்சரவு அபிப்பிராய பேதங்களை அடிப்படையாகக் கொண்டதாக மாட்டாது. அபிப்பிராய பேதங்களை ஒவ்வொருவரும் மதிக்கின்றனர். பிளவுகள் ஏற்பட்டிருப்பதற்கு வருந்துகின்றனர். காங்கிரசில் அதிகமான பிளவுகள் ஏற்பட்டிருப்பதற்கு ஒவ்வொருவரும் வருந்துகின்றனர். கஷ்டமெல்லாம் ஏற்படுவது யாரால் என்றால் ஒரு கட்சியும் சாராது சமாதானத்திற்காகப் பாடுபடுவதாகக் கூறுபவர்களால் தான். இவர்களுக்கு உண்மையான கொள்கைகள் இல்லாமல் இருப்பதால் போகுமிடங்களிலெல்லாம் இவர்கள் குழப்பத்தை யுண்டாக்கிக்கொண்டு போகிறார்கள். இதனால் ஒருவித நன்மையும் உண்டாகாது. உடன் பாடான வழியில் ஐக்கியம் ஏற்பட்டாலல்லாமல் அதனால் நன்மை உண்டாகாது. எதிர்மறை ஐக்கியத்தால் பிரயோஜனம் ஒன்றுங் கிடையாது. பம்பாய்த் தீர்மானத்தின் குறை இதுவேயாகும். பம்பாய்த் தீர்மானம் ஒரு கட்சியாருக்கும் திருப்தியை அளிக்கவில்லை. சட்டசபைக் கட்சியினர், தாங்கள் சட்டசபைக்குப் போகலாமென்று கருதி விட்டார்கள். பகிஷ்காரக் கட்சியினர் இறுதிவரை பலாத்காரமற்ற ஒத்துழையாமையைக் கடைப் பிடித்துச் சட்டசபை பகிஷ்காரத்தை நிறைவேற்றியே தீருவதென்று எண்ணி விட்டார்கள். இதனால் ஒருவருக்கும் அத்தீர்மானம் திருப்தியை யுண்டாக்கவில்லை.

கயை தீர்மானத்திற்குப் பிறகு உப்பு வரி உயர்ந்து விட்டது. ஊழியவர்க்கக் கமிஷன் நியமிக்கப்பட்டது. அலையன்ஸ் பாங்கி முறிந்துவிட்டது. உத்தியோகங்களில் இந்தியர்கள் பெரும்பான்மையாய் நியமிக்கப்பட வேண்டுமென்ற விஷயம் வெளிக்கப்படாமலிருக்கிறது. கென்யா விஷயஞ் சம்பந்தமாக இந்திய சட்டசபையினரின் அபிப்பிராயம் தள்ளிவிடப்பட்டது. சர்சிவஸ்வாமி ஐயர் சீர்திருத்தங்கள் பயனில்லையென்று கூறிவிட்டார். ஸ்ரீமான் ரங்காச்சாரியார் அரசாங்க முறைகளைக் கண்டித்துவிட்டார். இங்ஙனமெல்லாம் நடந்திருக்கின்றன. இதற்கெல்லாம் மாறாக, விசேஷ காங்கிரஸ் சட்டசபை எலக்ஷன்களில் ஈடுபடவேண்டுமென்று தீர்மானித்தால், நாம் அதன் தீர்மானப்படி நடக்க வேண்டும். அதுதான் தகுதியான முறையாகும்.

1921-ம்வருடக் காங்கிரசும் 1922-ம் வருட அகாலியர் சச்சரவும், இவ்வருடத்தில் ஏற்பட்டு நடைபெற்றும் வரும் நாகபுரி கொடிப்போராட்டமும் சட்டசபைக்குச் சம்பந்தமில்லாமலே நடைபெற்றிருக்கின்றன. இதையெல்லாம் கொண்டு விசேஷகாங்கிரஸ், சட்டசபை பிரயோஜனமற்றதும் ஆபத்தானதாகுமென்றுங் கருதினால் அதை வெளிப்படையாய்ச் சொல்லட்டும்.

எது எப்படியிருந்தபோதிலும் விசேஷ காங்கிரஸ், தேசமக்கள் எதைக் கொள்ள வேண்டுமென்பதை வெளிப்படையாய்க் கூறிவிடவேண்டும். திடசித்தமும் பலமும் இருந்தால் ஐக்கியம் உள்ளிட்ட எல்லாம் தானாகவே வந்துசேரும்.

### டாக்டர் இராஜனின் வேண்டுகோள்

தமிழ் நாட்டிலுள்ள எல்லா காங்கிரஸ் அபிமானிகளுக்கும் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி அக்கிராசனர் தீ. சே. சௌ. ராஜன் எழுதுவது:— தில்லியில் விசேஷ காங்கிரஸ் கூடப்போகின்றது. தமிழ் நாட்டிலிருந்து தில்லி வெகு தூரத்தில் இருக்கிறதாயினும் நாம் அகில இந்தியக் கமிட்டி அக்கிராசனருடைய முடிவைமதித்து விசேஷ காங்கிரஸ் கூட்டத்தை ஜெயம் பெற நடத்துவிக்க நம்மாலான முயற்சியாவும் செய்யவேண்டும். இற்றைக்கு மூன்று வருஷங்களுக்கு முன்னால் மகாத்மா காந்தியடிகளால் ஆரம்பிக்கப்பட்ட ஒத்துழையா இயக்கத்திற்கே தற்போது சோதனை காலமாகும். இச்சந்தர்ப்பத்தில தமிழ்நாடு எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று சொல்ல நான் இப்பொழுது முன் வரவில்லை. ஆனால் காங்கிரஸ் மகா சபைக்கு எவ்வளவு பிரதிநிதிகளை அனுப்பத் தமிழ்நாட்டிற்கு உரிமையுண்டோ அவ்வளவு பிரதிநிதிகளையும் அனுப்பித் தமிழ் நாட்டின் அபிப்பிராயம் காங்கிரஸில் சரியாக அறிவிக்கப்படுவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யுமாறு என்னுடைய சகோதர காங்கிரஸ்காரர்களை வேண்டிக் கொள்ளுவது என்னுடைய கடமையென்று கருதுகிறேன். தில்லிக்குப் போவதில் பணச் செலவு அதிகமாகு மென்பதும் காங்கிரஸ் அபிமானிகளில் பெரும்பாலோர் ஏழைகளென்பதும் எனக்குத் தெரிந்தேயிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு தாலூகாவிலுமுள்ள மகா ஜனங்கள் தங்களுடைய பிரதிநிதிகள் விசேஷ காங்கிரஸில் ஆஜராக வேண்டுமென்பதாக நிச்சயித்து அதற்கேற்படும் செலவில் ஒரு சிறு பாகத்தை ஏற்றுக்கொள்ள முன் வந்தால் இந்த பாரத்தைத் தாங்குவது அவ்வளவு கடினமாயிராது. ஐசுவரிய வந்தர்களையும் உலக சம்பத்து வாய்க்கப் பெற்றவர்களையுமட்டுமன்றி ஏழைகளாயினும் உண்மைத் தேசபக்தி வாய்ந்தவர்களைத் தலைவர்களாகக் கொள்ளுவதென்று மூன்று ஆண்டுகளுக்கு முன் தேச மகா ஜனங்கள் தீர்மானித்தபோது, மேற்படி வறுமை விரதம்பூண்ட தேச ஊழியர்களுக்கு அவர்களுடைய முயற்சியில் உதவி செய்யும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார்கள். இந்த அரிய பொறுப்பைத் தமிழ் நாட்டார் நிறைவேற்றி வைப்பார்களென்று நான் பரிபூரணமாய் நம்பியிருக்கின்றேன்.

---

### காசி ஹிந்து சர்வ கலாசாலை

#### ஒரு கனவானின் நன் கொடை

காசி ஹிந்து சர்வ கலாசாலையில் படிக்கும்நூறுமாணவர்களுக்கு பாபு ஜுகல்கிஷோர் பிர்லா என்பார் 15 ரூபா வீதம் கொண்ட நூறு உபகாரச் சம்பளங்களை நன்கொடையாக அளித்துள்ளார். இவைகளில் இருபத்தைந்து பிராமணர்களுக்கும் மற்ற ஜாதியினருக்கும் (இதில் இரண்டு சீக்கியர்களுக்கும் இரண்டு ஜைனர்களுக்கும் பிரத்தியேகப் படுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.) இருபத்தைந்து தாழ்ந்த வகுப்பு மாணவர்களுக்கும் பிரத்தியேகப்படுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. தாழ்ந்த வகுப்பினரைத் தவிர்த்து மற்றவர்களுக்கெல்லாம் உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்பட்டாய் விட்டன. தாழ்ந்த வகுப்பினரிடமிருந்து விண்ணப்பங்கள் எதிர்பார்க்கப்படுகின்றன.

---

துருக்கி தேசிய சபையின் உதவித்தலைவர் அங்கோராவைத் துருக்கியின் தலைநகராய்ச்செய்து விட்டார்.

## தொழிலாளர்

'சுதர்மா' பத்திரிகை பின் வருமாறு எழுதுகிறது:—

தாம் தலைவராய் இருக்கும் தொழிலாளர் கிருஷிகர் கட்சியைப்பற்றிக் கூறுகையில் ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியார், அக்கட்சிதான் இந்தியாவிலுள்ள தொழிலாளர் கட்சிகளில் தலை சிறந்து விளங்குவதாகுமென்று கூறியுள்ளார். ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியாருக்குத் தொழிற் சங்க நடவடிக்கைகளில் அநுபவம் கிடையாது. இவர் பக்கிங்ஹாம் கர்நாடிக் ஆலை வேலைநிறுத்தத்தில் முக்கியமான பங்கு எடுத்துக்கொண்டு வேலை செய்துவந்தார். ஆனால் இவருக்கு போஸ்டல், ரெயில்வே மெயில் சர்வீஸ் தொழிலாளர் சங்கங்களைப்பற்றியும் ஜி. ஐ. பி. தொழிலாளர் சங்கங்களைப்பற்றியும் அநுபவம் கிடையாது. ஆகவே இவர் இந்தியாவிலுள்ள எல்லாத் தொழிலாளர் சங்கங்களும் செயலற்றுவிட்டன என்று கூறுவது, அவர் போதிய அநுபவமின்றி எழுதி விடுகின்றார் என்பதைக் காட்டுவதாகின்றது. அவர் உலக தொழிலாளர் இயக்கங்களைச் செவ்வையாய்க் கவனித்தால், இந்தியாவிலல்லாமல் அநேக தேசங்களில் தொழிலாளர் சங்கங்கள் சோர்வுற்றிருக்கின்றன என்பது பெறப்படும்.

அநுபவ வேலைக்கு நான்கு விதமாய்க் காரியங்களைச் செய்து கொண்டுபோக வேண்டுமென்பதை ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியார் ஒப்புக்கொள்கிறார். தொழிலாளர் இயக்கத் தத்துவத்தைப் பற்றியும் அதன் இறுதியான கொள்கைகளைப் பற்றியும் இந்தியாவிலுள்ள கட்டுப்பாடான தொழிற் சங்கத்தார் கவனிக்க விட்டுவிடப்பட வேண்டும். நம்தேசத்தில் ஜாதிச் சண்டைகளல்லாமல் வகுப்புச் சண்டைகள் ஏற்படவில்லை. சென்னைத் தொழிலாளர் சங்கமும் ஜாதிவித்தியாசம் காரணமாய்த்தான் உடைந்துவிட்டது. ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியாரும் அவரைப்போல் அபிப்பிராயமுடையவர்களும் இந்தியாவில் நாட்ட உத்தேசித்திருக்கும் கொள்கைகளும் எண்ணங்களும் பைத்தியக்காரத்தனமானவையாகும். திடீரென கொள்கைகளையும் எண்ணங்களையும் ஜனங்களிடை உண்டாக்கிவிட முடியாது. மெல்லமெல்லத்தான் அவை ஜனங்களிடையே ஏற்பட வேண்டும். இந்தியாவிலுள்ள தொழிலாளர்களின் பிரதிநிதியாய் இருக்கப்பட்டது அகில இந்திய தொழிலாளர் மகா நாடேயல்லாமல் எழுத்தளவிலும் மிகக் குறைவான அங்கத்தினர்களையும் கொண்டுள்ள தொழிலாளர் கிருஷிகர் கட்சியாக மாட்டாது. அகில இந்தியத் தொழிலாளர் மகாநாட்டார் தொழிலாளர் விஷயங்களை சர்வதேச நோக்கங் கொண்டு கவனித்து வருவதல்லாமல் ஸ்ரீமான் செட்டியார் குறிப்பிட்டிருக்கும் முறைகளை ஆண்டும் கவனித்தும் வருகிறார்கள்.

ஒவ்வொருவரும் அவரவர்கள் இஷ்டப்படி திட்டத்தைத் தயாரிக்க உரிமையுள்ளவர்களாவர். சாதாரண குடிசையைக் கட்டும் ஒரு மனிதனைக் காட்டிலும் சந்திரனைப் பிடிக்கவேண்டுமென்று பெருத்த கூச்சலிடும் ஒருவன் பெருத்த எண்ணக்காரன் என்று கருதப்பட்டால், இந்தியத் தொழிலாளருக்கு ஒரு நன்மையுஞ் செய்யாத தொழிலாளர் கிருஷிகர் கட்சியார் பெருத்த எண்ணக்காரர்கள என்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதே. தொழிலாளர் சங்க வேலைகளில் தலையிடாது தன வேலையைச் செய்துகொண்டு போயிருந்தால் தொழிலாளர் கிருஷிகர் கட்சியைத் தனியாய் விட்டு விடலாம். உணவுக்காகக் கஷ்டப்படும் நிலையிலிருக்கும் தொழிலாளர்களுக்குத் தத்துவத்தைப்பற்றியும் கவியைப் பற்றியும் கூறுவதேன்? ஆகவே உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவற்றைப் பெறக் கிளர்ச்சிசெய்ய வேண்டும். அங்ஙனமானால் இந்தியத் தொழிலாளர்கள் சந்தோஷமான வாழ்க்கையை நடத்த முடியும். இந்தியாவிலுள்ள தொழிலாளர்கள் பசியால் வருந்திக்கொண்டிருக்கும் நிலையிலிருக்கிறார்கள். இந்தியாவினின்று கூலிகள் ரூபா 10-க்கும் 12-க்கும் மலேயா பர்மா ஆகிய இந்நாடுகளுக்குச் செல்கிறார்கள். ஆகவே தொழிலாளர்களுக்கு இன்றியமையாததாய் வேண்டப்படுவது உணவா? கொள்கைகளா? இவ்விஷயந்தான் தொழிலாளர்களைப் பாதித்து வருகின்றது. தொழிலாளர் கஷ்டங்களை நீக்கவல்லது தொழிலாளர் சங்கங்கள் தான். அந்நிய நாட்டுக் கொள்கைகளில் மூழ்கிக் கிடக்கும் தலைவர்கள் தொழிலாளர்களை ஒன்று சேர்ப்பதற்கும் பதி லாக அவர்களை வேறு பிரித்து விடுகின்றவர்களாகின்றனர். சில ஜாதிகளைக் கவனித்தால் அவை தொழிலாளர் சங்கங்களாகவே இருக்கின்றன. ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கும் அனைவரும் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களென்று எண்ணும்படியாய் அவர்களைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் தான் இந்தியத் தொழிலாளர்கள் நன்மையடைய முடியும்.

## ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை

### டாக்டர் கிச்லுவின் அபிப்பிராயம்

டாக்டர் கிச்லு சமீபத்தில் பம்பாய்க்குச் சென்றிருந்த காலையில் அவரை ஒரு பிரதிநிதி பேட்டி கண்டு பேசுகையில் அவர் இந்து முஸ்லீம் ஒற்றுமையைப் பற்றிக் கூறியதாவது:—

நான் சிறையிலிருக்கும்போது பொதுவாக தேசத்தின்நிலையும் சிறப்பாக பஞ்சாபின்நிலையும் மிகவும் நெருக்கடியாயிருக்கின்றன என்று சொல்லப்பட்டு வந்தன, ஆனால் அங்ஙனம் இருப்பதாகத் தெரியவில்லை. பஞ்சாபில் சிறிதளவுக்கு ஹிந்து முஸ்லீம் சச்சரவு இருந்து வருவதுண்மையே. பத்திரிகைகளில் வெளிவருஞ் செய்திகளை விட்டுவிட்டுக் கவனிக்கப்போனால் தேசமும் தேசமக்களும் காங்கிரஸ் குறிப்பிடும் முறையைக் கைக்கொள்ளத் தயாராயிருக்கின்றனர் என்பது பெறப்படுகிறது. விசேஷ காங்கிரஸ் முறையான வழி பின்பற்றினால் தேசம் பழைய நிலையை எய்தும். நம்முடைய இயக்கம் புரட்சியானதேயாகும். நாம் வேண்டுவதெல்லாம் ஆட்சி முறையில் புரட்சியான மாற்றங்கள் ஏற்பட்டு மனோவாக்குக் காயங்களால் பலாத்காரமற்ற ஒத்துழையாமையை மேற்கொள்ள வேண்டியதாகும். ஜனங்கள் மகாத்மாவிடம் அன்புடையவர்களாகவே இருந்து வருகிறார்கள். மகாத்மா காந்தி தண்டிக்கப்பட்டபோது நான் வெளியிலிருந்திருந்தால், நம்முடைய நிர்மாண வேலைத் திட்டத்தில் மகாத்மாவின் விடுதலையையே முதன்மையாய் வைத்திருப்பேன். காங்கிரஸுக்குள் கட்சிப் பிளவுகள் ஏற்பட்டிருப்பது வருந்தத்தக்க விஷயமாகும். இதற்காக ஒரு கட்சியார் மீதும் குறை கூறுவதற்கில்லை.

பஞ்சாபில் ஹிந்து முஸ்லீம் அபிப்ராய பேதங்கள் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் அரசியலாகமாட்டாது. சீக்கிய குருத்வாரப்பிரபந்தக்கமிட்டியார் சீக்கியர்களுக்குள் ஐக்கியத்தையுண்டாக்கக் கடைப்பிடிக்கும்வழிகளை இந்துக்களும் முஸ்லீம்களும்கடைப்பிடித்தால் சமாதானத்தை நிலைநிறுத்தமுடியும். இயற்கையாகவே இந்துக்களும் முஸ்லீம்களும் சச்சரவில்பிரியங்கொண்டவர்களல்லர். இந்த முஸ்லீம் ஒற்றுமை இன்றியமையாததாகும். அஃதில்லாமல் ஒரு நிமிடமும் வாழமுடியாது. அது தான் நம்முடைய நோக்கத்தை நிறைவேற்ற வல்லதாகும். இந்து முஸ்லீம் ஒற்றுமை இல்லாத சுயராஜ்யம் வேண்டியதில்லை. ஒவ்வோர் இந்தியனும் தேசீயவாதியாய்ப் போலிதல் வேண்டும். இந்தியாவிலுள்ள இந்தியர்கள், இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள், யூதர்கள், கிறிஸ்தவர்கள் முதலிய அனைவரும் ஜாதி வித்தியாசங்களையும் மதவித்தியாசங்களையும் விட்டு விட்டு தேசப்பற்றையே பிரதானமாகக் கொண்டு தேசத்திற்காக உழைக்க முந்தவேண்டும். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஒற்றுமையுண்டாக்க நான் செய்யும் முயற்சியில் பஞ்சாப்புக்கு வெளியிலுள்ளவர்களின் உதவியும் வேண்டியதே. பிரபலமானவர்கள் அதற்கு இணங்கியுமுள்ளார்கள். இந்து முஸ்லீம் ஒற்றுமையை உண்டாக்க என் உயிரையும் இழக்கச் சித்தமாய் இருக்கிறேன்.

அரசியலைப் பொறுத்த மட்டில் துருக்கிவிஷயம் சதுதியான ஒரு முடிவை அடைந்து விட்டது. மதவிஷயம் இன்னும் சதுதியான ஒரு முடிவை அடையவில்லை. ஜஸிரத்—உல் அரப் முஸ்லீம்களின் வசம் ஆகும்வரை அதற்கெனக் கிளர்ச்சி நடைபெற்றுக் கொண்டே போகவேண்டும். இதை உலமாக்களும் கிலாபத் கமிட்டியாரும் அங்கீகரிக்கவேண்டும். அவர்களுடைய சொந்த விஷயங்களைத் துருக்கியர்கள் இஷ்டப்படி நடத்திக் கொண்டுபோக விட்டுவிட வேண்டும். கிலாபத் சம்பந்தமான விஷயங்களை உலக முஸ்லீம்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். உலக முஸ்லீம்கள் மகாநாடு அவசியம் என்பதை நான் உணர்கிறேன். கலிபா தன் அதிகாரங்களை இதற்கு முன் இருந்ததைப்போல் துருக்கியர்களிடமிருந்து மாத்திரம் பெறாமல் முஸ்லீம் உலகத்திலுள்ள அனைவரிடமிருந்தும் பெற வேண்டும். கலிபாவானவர் மதசம்பந்தமான விஷயங்களில் மாத்திரம் தலையிட வேண்டும். பாரசீகம் துருக்கி, அராபியா இந்தியா ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களின் அரசியல் விஷயங்களில் தலையிடக்கூடாது. அரசியல் விஷயமாக உலக முஸ்லீம்கள் ஐக்கியப்படுவது இன்றியமையாதது.





## பண்டைத் தமிழ் நாட்டின் வல்லரசுகள்

ஸ்ரீமான் எஸ். கோபாலசாமி எழுதியது

### இராஜேந்திரன் (1012-1042 கி. பி.)

இவன் இராஜராஜன் ஆட்சி முடிவுபெற்றதும் சோழ ராச்சியத்தை 30 வருஷ காலம் ஆண்டிருந்தவன். இவன் அரசாட்சியில் தமிழ் நாட்டின் பெருமை இராஜராஜசோழன் காலத்தினும் பதின்மடங்கதிகமாகப் பெருகியது. இம்மன்னனுக்குக் 'கங்கை கொண்டான்', 'முடி கொண்ட சோழன்' 'நிகரிலிச் சோழன்', 'மதுராந்தகன்' 'உத்தம சோழன்' 'கிடாரங் கொண்டான்' 'பண்டித சோழன்' என்றும் பெயர்கள் உண்டு. இவை பெரும்பாலும் இவனுடைய வெற்றிகளையும் சாமர்த்தியத்தையும் குறிப்பிடுகின்றன. இவன் இளவரசனாய் இருந்தபொழுதே தனது தகப்பனான இராஜ ராஜனுடைய போர்களில் கலந்து கொண்டு அதிக வீரத்தையும் தைரியத்தையும் காட்டி வந்தனன்.

இராஜேந்திரனின் முதல் இருபது வருஷங்கள் யுத்த களத்திலேயே கழிந்ததெனலாம். இம்மன்னன் ஜயித்த நாடுகள் கணக்கில் அடங்குவதன்று. அவை தக்ஷிண முழுமையும், கங்கைப் பிராந்தியமும், பர்மாவும், இலங்கைத் தீவும் நிக்கோபார் தீவுகளும் உத்தர தக்ஷிண வடங்களுமாம். இன்னும் இவை கல்வெட்டுகளில் வேங்கை நாடென்றும், கங்கபாடி யென்றும், நுளம்ப பாடியென்றும் தடிகைப் பாடியென்றும், ஒட்ட விஷயம் என்றும், மாசுணித்தேய மென்றும் குறிப்பிடப்படுகின்றன. இவற்றுள் சில எங்கேயுள என்று தெரியவில்லை. இராஜ ராஜன் பட்டத்துக்கு வந்து 5, 6 வருஷங்களுக்குள்ளேயே இடைத்துறை நாட்டையும், வனவாசியையும், கொள்ளிப் பாக்கத்தையும், ஈழ மண்டலத்தையும் கைப்பற்றினனென்று நினைக்க ஆதாரமுண்டு. இலங்கைச் சரித்திரமாகிய 'மஹா வம்சம்' என்னும் புராதன நூலில் இராஜேந்திரன் இலங்கையை வென்று அவ்வரசன் முடியையும், எண்ணிறந்த ஆபரணங்களையும், பாண்டிய மன்னன் ஒரு சமயத்தில் ஈழ மன்னனிடம் கொடுத்திருந்த அழகுள்ள முத்து மாலையையும் கவர்ந்தனன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பின்னரே 'முடி கொண்ட சோழன்' என்ற பட்டம் இவ்வரசனுக்கு வழங்கலாயிற்று. இராஜேந்திரன் பட்டத்துக்கு வந்து 9-ம் வருஷத்திற்குள் பரசுராமர் வசித்திருந்த சாந்திமத்தீவையும் கைக்கொண்டு சளுக்கிய ஜயஸிம்மனையும் முயங்கி என்னும் போர்க்களத்தில் முறியடித்து இரட்டைப் பாடி ஏழரை லக்ஷத்தையும் சோழ ராச்சியத்தில் சேர்ப்பித்தான்.

பன்னிரண்டாம் வருஷமாகிய கி. பி. 1023-இல் நிகழ்ந்த யுத்தங்களும் வெற்றிகளுமே இராஜேந்திரனின் இராணுவப் பெருமையை உலக முழுவதும் வியக்கும் வண்ணம் விளக்குகின்றன. இவ்வருஷத்திலே தான் இராஜேந்திரனின் வட இந்திய வெற்றிகள் யாவும் நிகழ்ந்தன. இராஜேந்திரனின் உத்தேசம் கங்கை சென்று கங்கை நீர் கொணர்ந்து தனது இராஜதானிக்குத் திரும்பிக் காவிரி யாற்றில் கலப்பித்தல் போலும். இவ்விஷயத்தில் இராஜேந்திரன்,

> "மறத்துறை முடித்த
> வாய்வாட் டானையொடு
> பொங்கிரும் பரப்பிற்
> கடல்பிறக் கோட்டிக்
> கங்கைப் பேர் யாற்றுக்
> கரை போகிய"

செங்குட்டுவனின் செய்கையைப் பின்பற்றினன் போலும். இவ்வட இந்திய யாத்திரையில் நிகழ்ந்த போர்களும் வெற்றிகளும் கணக்கற்றவை; எனினும் அவை முழுதுமே ஒரே வருஷத்தில் முடிவு பெற்றமை இராஜேந்திரனின் இராணுவ தந்திரத்தின் மாட்சியைச் சூசிப்பதாகும். இப்போரில் வங்காள தேசத்து மஹீபாலனும், தக்கணலாடத்து ரணசூரனும், கோசல நாட்டதிபதியும், ஒட்ட விஷயத் தரசனும், சந்திரகுலத்து இந்திரரதனும், மாசுணி தேசத்தரசனும், இன்னும் பல அரசர்களும் வடதிசை நோக்கி வரும் இராஜேந்திரனின்சேனையைத் தனியாகவும் ஒருங்கு சேர்த்தும் எதிர்த்தனரெனினும் இவர் முறியடிக்கப்பட்டனர். இங்கே குறிக்கப்பட்ட தேசங்களுள் தக்கணலாடமென்பது பீரார் பிரதேசமென்றும், ஒட்ட விஷயமென்பது தற்கால ஒரிஸ்ஸா வென்றும் சரித்திரக் காரர்கள் உத்தேசிக்கின்றனர். செங்குட்டுவன்பத்தினிக் கல்லை நீராட்டித் தூய்மை செய்தற்குச் சென்ற கங்கை யாத்திரையில் ஆரிய மன்னர் அவனை எதிர்த்துப் பெரும்போர் விளைத்தது போலவே இராஜேந்திரன் காலத்தும் வடபுலத் தரசர் எதிர்த்தனர் போலும். இம்மன்னர்களை முறியடித்து அவர்களுள் வங்காள தேசத்தரசனான மஹிபாலனையே கங்கை நீரைச் சுமந்து தமிழ் நாட்டிற்குக் கொணரச் செய்தனனென்றும் இவ்வாறு கொண்டு வரப்பட்ட கங்கை நீரால், இராஜேந்திரனால் புதிதாக அமைக்கப்பட்டதும் கங்கை கொண்ட சோழபுரம் என்று பின்னர் பெயரிடப்பட்டதுமான சோழர் இராஜதானியிலுள்ள பெரிய தடாகம் தூய்மை செய்யப்பட்டது.

இராஜேந்திரன் கங்கை படையெடுப்பு கலிங்கத்துப் பரணியில்,

> "களிறு கங்கை நீருண்ண மண்ணையிற்
> காய்சினத் தொடே கலவு செம்பியன்
> குளிறு தெண்டிரைக் குரை கடாரமும்
> கொண்டு மண்டலங் குடையுள்
> வைத்ததும்."

என்ற 25-வது இராச பாரம் பரியச் செய்யுளாலும் உணர்த்தப்படுகிறது.

தஞ்சாவூரே இதுகாறும் விஜயாலய சோழரின் முக்கிய இராஜதானியாக இருந்தது. இராஜேந்திரன் எந்தக் காரணங் கொண்டோ தஞ்சாவூர் துறந்து திருச்சி தாலுக்காவிலிருக்கும் உடையார்பாளையத் தருகிலுள்ள கங்கை கொண்ட சோழபுரத்தைத் தனது இராஜதானியாக்கிக் கொண்டான். இங்கே இம்மன்னனால் சமைக்கப்பட்ட சிவாலயமும், சோழரரண்மனையும் மிகவும் பாழடைந்திருப்பினும் அழகும் திறமும் அமைந்திருப்பதைக் காணலாம். இந்நகரில் அமைக்கப்பட்ட சிவாலயம் தஞ்சாவூரில் இராஜ ராஜேச்வரத்தின் பொது அமைப்பைப் பெரும்பாலும் பின் பற்றியதாகும்; சிற்பத்திறம் மிகுதியும் வாய்ந்தது. இங்குள்ள கோபுரத்தின் உயரம் 174 அடி என்றும் பிராகாரத்தின் விஸ்தீர்ணம் 584 அடிகளென்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆலயத்திலிருக்கும் சிவலிங்கம் 30 அடி உயரமுள்ள ஒரே கருங்கல்லில் செதுக்கப்பட்டதாகும். இக்கோயிலின் அருகில் உள்ள பெரிய ஏரியின் கரை 16 மைல் விஸ்தீர்ணமுள்ளதெனவே அக்காலத்தில் எவ்வளவோ வயல்களின் நீர்ப்பாசனத்திற்கு உபயோகப்பட்டிருக்க வேண்டும். இவ்வேரியின் கரையில் கட்டப்பட்டிருந்த கற்சுவரும், அவ்வூர் சிவாலயத்தின் வெளி மதிற்சுவர்களும் சில வருஷங்களுக்கு டி. பி. டப்ளியு. இலாக்கா உத்தியோகஸ்தர்களால் கொள்ளிடம் அணைக்கட்டு கட்டுவதற்கு உபயோகிக்கப்பட்டது குறிப்பிடத் தக்கது.

நிற்க இராஜேந்திரன் நிலப்படை எவ்வளவு சாமர்த்தியமும் வீரமும் படைத்திருந்ததோ அவ்வளவு ஆற்றலும் அவன் கப்பற்படைக்கு உண்டு என்பது அவன் கப்பற்படை வெற்றிகளால் நன்குவிளங்குகிறது. இவ்வெற்றிகள் பின்வரும் மெய்க்கீர்த்தியால் விளங்கும்.

> "தெண்டிரை ஈழ மண்டல முழுவதும்
> சங்கதிர் வேலை
> தொல்பெருங் காவற் பல்பெருந்தீவும்
> நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
> கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும்
> தேனக் கவார்பொழில் மானக்கவாரமும்
> தொடு கடற்காவல் கடுமுரட் கடாரமும்
> மாப்பெருந் தண்டாற் கொண்ட கோப்
> பரகேசரி
> ஸ்ரீராஜேந்திரச் சோழதேவர்."

இங்கே குறிப்பிட்ட தேசங்களுள் பல் பெருந்தீவென்பன அராபிக் கடலிலுள்ள லக்ஷத் தீவுகளும் நக்க வாரம் என்பது நிக்கோபார் தீவுகளும், கடாரம் என்பது பர்மாவும் போலும். (கடாரம் என்பது சுமாத்திரா தீவிலுள்ளதென்றும் சிலர் கருதுவர்) இராஜேந்திரன் காலத்தில் கீழ் சமுத்திரத்திலுள்ள தீவுகளுக்கும், தமிழ் நாட்டிற்கும் போக்கு வரவு அதிக முண்டென்பது அப்பிரதேசங்களில் அகப்படும் தமிழ் கல்வெட்டுகளால் புலப்படுகிறது. இன்னும் இராஜேந்திரன் ஆசியாவின் வடகிழக்குப் பிராந்தியங்களையும் ஜெயிப்பதற்கு உத்தேசித்திருந்தனன் என்பது இம்மன்னனால் 1033 கி. பி. இல் சீனராஜாங்கத்தாருக்கு அனுப்பப்பட்ட தூதால் தெரிகிறது. இவ்விஷயம் 'சூங்ஷீ' என்ற சீனசரித்திர நூலில் கூறப்பட்டிருக்கிறது. இவற்றால் இராஜேந்திரனின் கப்பற்படை மிகவும் பெரிதென்றும் அதிக ஆற்றலுடையதென்றும் விளங்குகிறது. ஆயினும் அக்காலத்து சமுத்திர யுத்தங்களின் முறை எவ்வாறென்பது விளங்கவில்லை.

இராஜேந்திரன் கல்வித் திறம் மிகவும் வாய்ந்தவன் என்பது இவன் அடைந்திருந்த 'பண்டித சோழன்' என்ற சிறப்புப் பெயரால் நன்கு விளங்கும். இவ்வரசன் கங்கை கொள்ளச் சென்றிருந்த சமயத்தில் வட புலத்திலிருந்து அநேக அறிவு முதிர்ந்த அந்தணரை அழைத்து வந்து தமிழ் நாட்டில் குடியேற்றினனென்று சொல்லப்படுகிறது. இராஜேந்திரன் கங்கை யாத்திரை செய்து திரும்பி வந்த பின்னர் இராஜ ராஜ சதுர்வேதி மங்கலமென்ற எண்ணாயிரக் கிராமத்திலுள்ள இராஜ ராஜ விண்ணகர் என்னும் ஆலயத்தில் ஒரு பெரிய கல்விச்சாலையை ஏற்பாடு செய்து வேத பாடங்களின் போதனைக்கென்று 45 வேலி நிலங்களும் 61½ கழஞ்சு பொன்னும் வித்யா தானமாகக் கொடுத்தானென்று அவ்வூரில் அகப்பட்ட கல்வெட்டொன்றால் தெரிகிறது. இவ்வேதக் கல்லூரியில் தற்கால சம்பிரதாயத்தை ஒட்டி மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் கோவிலின் அருகாமையிலேயே சாப்பாட்டு விடுதிகள் ஏற்பட்டிருந்தனவென்றும் இக்கல்வெட்டால் தெரிகிறது. சுமார் 350 மாணவர் இராஜேந்திரனால் ஏற்படுத்தப்பட்ட இவ்வேத பாடசாலையில் பயின்று வந்தனர். இதுவும் இராஜேந்திரனின் கல்விப் பிரியத்தை நன்கு விளக்கும். இவ்வாறு சுமார் 30 வருஷ காலம் பெரும்புகழுடன் அரசு புரிந்த இராஜேந்திரனின் ஆட்சி கி. பி. 1042-3-இல் முடிவடைந்தது.

## அறவுரை

(ஸ்ரீமான் போ. திருகூட சுந்தரம் பிள்ளை மொழி பெயர்ப்பு)

1. ஜனங்கள் தங்களை அறிவாளிகளெனக்கருதும் பொழுதுபோல,வேறெப்பொழுதும் அவ்வளவு அறிவிலிகளாய் நடந்து கொள்வதில்லை—மேரி வார்ட்லி மாண்டேகு.

1. அடிமைகளே! அறியீர்களா? விடுதலை விரும்புபவர் தாமே அதற்கானவேலை செய்யவேண்டும்—பைரன்.

3. வேண்டுங்கால் உதவும் நண்பன் உள்ளவன் பாக்கியசாலி; ஆனால் நண்பன் உதவி வேண்டாதவன் அவனிலும் பாக்கியசாலி—வார்விக்.

4. அறமொன்றே இவ்வுலகில் ஆனந்த மளிப்பது; இந்த உண்மையை அறிந்து கொள்; மனிதன் அறிவதற்கு இது போதும்—போப்.

5. மனிதனுக்கு இவ்வுலகில் வேண்டுவது அற்பம்; அதுவும் சிறிது நாட்கே—கோல்ட்ஸ்மித்.

6. தனியாக இருக்க முடியாததினாலேயே சகல துன்பங்களும் உண்டாகின்றன—லா புரூயர்.

7. புத்திமான் தன்னை விட்டுக் கடைசியாகநீக்கும் ஆசை புகழாசையே—டாவிட்டன்.

8. இராட்சதன் பலம் இருத்தல் நலம். ஆனால் இராட்சதனைப்போல் அதை உபயோகித்தல் தீது—ஷேக்ஸ்பியர்.

9. ஈதலாகிய பெரும் போகம் இத்தகைய தென்றறிய ஏழையாயிருக்க வேண்டும்—ஜார்ஜ் எலியட்.

10. சிக்கனமின்றி ஒருவரும் செல்வராக முடியாது. சிக்கன மிருப்பின் வெகு சிலரே ஏழை யாவர்—டாக்டர் ஜான்ஸன்.

11. இசையின்றி இருயுகம் வாழ்தலினும் இசைபட ஒரு பொழுது வாழ்தலே ஏற்றமுள்ளது—ஸ்காட்.

12. துன்புறுவோர் தரிசனம் இன்புறுவோர்க்குத் துயர்தருமாம், ஐயோ! இன்புறுவோர் தரிசனம் துன்புறுவோர்க்கு அதனினும் அதிகத்துயர் தருமே! கிதே.

13. நாணயம் நல்ல தந்திரமே. ஆனால் அவ்விதம் நடப்பவன் நாணயஸ்தன் அல்லன்—வாட்லி.

14. எவரைக் காணுந்தோறும் இறைவன் ஞாபகம் வருகின்றதோ அவரே ஆண்டவன் அடியாரிற் சிறந்தவர்—மகமதுநபி.

15. சோம்பேறி இரண்டு முட்களும் இல்லாத கடிகாரத்தை ஒப்பான். நிற்கும் பொழுதும் பயனில்லை; ஓடும்பொழுதும் பயனில்லை—கௌப்பர்.

16. வஞ்சனை யென்பது இழுக்கம் ஒழுக்கத்திற்குச் செய்யும் ஒருவகை கௌரவமாகும்—ரோஷிபாக்கால்டு.

17. ஏழை பல வஸ்துக்களை விரும்புகிறான். ஆனால் பொருளாசை யுள்ளவன் சகல வஸ்துக்களையும் விரும்புகிறான்—ஸெனீக்கா.

18. எல்லாருக்கும் பொருள், உத்தியோகம், கௌரவம் முதலியன கிடைத்தல் அரிது. ஆனால் ஒவ்வொருவரும் நல்லவராயும், அருளுடையவராயும், அறிவுடையவராயும் இருத்தல்கூடும்—வாவனார்கூஸ்.

19. படித்தவன் குனத்தை யொப்பான். ஞானி சுனையை யொப்பான்.

20. நெடுநாள் வாழ்தல் அநேகமாய் அனைவருடைய விருப்பம். நன்னெறியில் வாழ்தல் சிலருடைய லட்சியம்—ஹாய்ஸ்.

### 73-வது வயதில் விவாகம்

இந்திய ரெயில்வே கமிட்டியின் தலைவராய் இருந்த சர்வில்லியம் ஆக்வொர்த் ஆஸ்திரியாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்கிறார். இவர் தம் 73-ம்வயதில் தம் காரியதரிசியான மிஸ் வோதர்ஸ்பூண் என்னும் மாதை வியன்னாவில் கலியாணஞ் செய்து கொண்டார்.

---

இம்மாதம் 18-ந் தேதியில் கான்பூர் நகரபரிபாலன சபையார் பண்டிதர் நேருவுக்கு உபசாரப்பத்திரம் ஒன்றை வாசித்துக் கொடுத்தார்கள். ஸ்ரீ நேரு இதற்குப் பதிலளிக்கு முகத்தான், இதுவரை நகர பரிபாலன சபைகள் அரசாங்க ஊழியர்களுக்கே உபசாரப் பத்திரங்களை வாசித்துக்கொடுத்து வந்திருக்கின்றன வென்றும் அலகாபாத் நகரபரிபாலன சபையார் அவ்வழக்கத்தை மீறி முதல் முதலாக ஸ்ரீ தாஸருக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தனரென்றுங் கூறினார்.

## கென்யா ஏமாற்றம்

### பீ அம்மன் வேண்டுகோள்

கென்யா விஷயமாய்ப் பிரிட்டிஷார் செய்த தீர்மானத்தைப்பற்றி அலி சகோதரர்களின் தாயாரான பீ அம்மன் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார். அதில் காணப்படுவன வருமாறு:—

இந்தியாவிலுள்ள ஆண் பெண் என்ற இருபாலாரும் தங் கடமையை உணர்ந்து காரியங்களைச் செய்து கொண்டு போவார்களென்று நான் நம்புகிறேன். இன்னும் தூக்கத்தினின்று எழுந்திருந்து கென்யா விஷயமாய் நாம் செய்யும் கண்டனம் நாகரிகமடைந்த உலகம் அறியும்படியாய்ச் செய்ய வேண்டும். கென்யா விஷயமாக மாத்திரமல்லாமல் இன்னு மநேக விஷயங்களிலும் பிரிட்டிஷார் இந்தியர்களை அவமானத்திற்கு உள்ளாக்கியே வந்திருக்கிறார்கள். இத்தகைய அகௌரவங்கள் நாம் அடிமைகளாய் இருக்கும் வரை இருந்துகொண்டுதானிருக்கும். கென்யா விஷயமாய் ஏற்பட்டுள்ள அநீதியைப் போக்கடிக்க வல்லது சுயராஜ்யமேயாகும். கிலாபத் பஞ்சாப் அநீதிகளை நீக்கவல்லதும் சுயராஜ்யமேயாகும். ஆகவே இம்மாதம் 27-ந் தேதியில் கொண்டாட விருக்கும் வேலை நிறுத்தத்தை இதற்குமுன் நடந்திராத அளவுக்குச் செய்ய வேண்டும். தாய் நாட்டுக் குழந்தைகளே! உங்களுடைய தேசத்திற்காக உங்களுடைய கடமையைச் செய்யுங்கள். கோரிக்கைகள் நிறைவேறும்வரை விடா முயற்சியுடனும் ஊக்கத்துடனும் திட சித்தத்துடனும் காரியங்களைச் செய்து கொண்டு போக வேண்டும்.

## ஸ்ரீ புருஷோத்தம் தாஸ் தாகூர் தாஸ்

பிரிட்டிஷ் இந்தியன் கலோனியல் அசோசியேஷன் என்ற சங்கத்தின் சார்பாய் சர் புருஷோத்தம் தாஸ் தாகூர் தாஸ் இந்திய அரசாங்கத்தாருக்குக் கென்யா விஷயமாகப் பிரிட்டிஷார் செய்த தீர்மானத்தைக் கண்டு, கென்யா உள்ளிட்ட எல்லாக் குடியேற்ற நாடுகளிலும் வியாபார சம்பந்தம் வைத்துக்கொண் டிருக்கும் இச்சங்கத்தார் இந்தியாவுக்கும் ஏகாதி பத்தியத்திற்கும் உள்ள சம்பந்தம் அதிகமாய்ப் பாதிக்கப்படுமென்று கருதுகிறார்கள் என்றும் குடியேற்றநாடுகளில் உள்ள இந்தியர்கள் கொடுமைக்கு உள்ளாக்கப்படாமல் பார்த்துக்கொள்ளவும் அவர்களின் உரிமைகளைப் பாதுகாக்க ஏகாதிபத்தியத்தின் எல்லாப் பாகங்களிலும் விசேஷ உத்தியோகஸ்தர்களை நியமிக்க வேண்டுமென்றும் கருதுகின்றனர் என்றும் எழுதியுள்ளார். இதல்லாமல் இராஜப் பிரதிநிதியாருக்கெழுதியுள்ள கடிதத்தில் கென்யா விஷயம், பிரிட்டிஷ் நீதியில் இந்தியர்கள் கொண்டிருந்த நம்பிக்கையை இழக்கும்படி செய்துவிட்டதென்றும் இத்தீர்மானத்தினால் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் எத்தகைய பாதகம் உண்டாகுமென்று கருதாமற்போன அரசியல் வாதிகளின் போக்குக்காக வருந்துவதாகவும் மேற்படி சங்கச் சார்பாக எழுதி யுள்ளார்.

## 27-ந் தேதி வேலை நிறுத்தம்

### தமிழ்நாட்டுக் காங்கிரஸ் விண்ணப்பம்

(காரியதரிசியிடமிருந்து)

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் திடீரென கெனியா விஷயத்தை முடிவுக்குக் கொண்டு வந்து விடவில்லை. பார்லிமெண்ட் பிரிட்டிஷ் ஜனங்கள் ஆகிய இவர்களின் அபிப்பிராயங்களைக் கொண்டே தீர்மானித்துள்ளார்கள். ஆகவே நாம் செய்யவேண்டுவது 27-ந் தேதியில் மகாத்மா காந்தியின் கொள்கைகளுக்குமாறுபடாமல் வேலை நிறுத்தம் செய்து நாம் சுதந்திரம் அடையத்தீர்மானித்து விட்டோம் என்பதைக் காட்டிக்கொள்ள வேண்டும்.

## மதுரை தேசபக்த சமாஜம்

(ஒரு நிருபரிடமிருந்து)

திண்டுக்கல்லை விட்டுப் புறப்பட்ட மதுரை தேசபக்த சமாஜத்தார் இம்மாதம் 13-ந் தேதி முதல் திரிசிராப்பள்ளி கரூர் ஆகிய இவ்விடங்களில் தேசிய பஜனையும் உபந்யாசங்களும் செய்து வருகிறார்கள்.

## ஹாங்காங்கில் பலமான புயல்

சைனாவிலுள்ள ஹாங்காங் துறைமுகப் பட்டினத்தில் புயல் மும்முரமாய் அடித்து வருகிறது. எல் 9 என்ற பிரிட்டிஷ் சப்மரைன் மூழ்கிவிட்டது. அநேக கப்பல்கள் உடைந்துவிட்டன. பொருள் நஷ்டமும் உயிர்ச்சேதமும் அதிகமென்று நம்பப்படுகிறது. எல் 9 என்ற சப்மரைன் மூழ்கிவிட்டதிலிருந்த மாலுமிகளெல்லாம் காப்பாற்றப்பட்டார்கள். இப்புயற்காற்றின் பயனாய் மாகோ எனுமிடத்தி லிருந்த அநேக வீடுகள் நாசமாயின. சுமார் 40 பேர் உயிர் துறந்தும் காயமடைந்தும் போனார்கள். அநேக படகுகள் கவிழ்ந்துவிட்டன. நூறு ஜனங்கள் மூழ்கிவிட்டார்கள்.

## சென்னைத் தொழிலாளர் கூட்டம்

சென்னைத் தொழிலாளர்களின் கூட்டம், சென்ற செவ்வாய்க்கிழமையில் தூளையிலுள்ள எட்வர்ட் பார்க்கில் ஸ்ரீமான். எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் தலைமையில் நடைபெற்றது. அதுபோழ்து கீழ்வருந் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. சென்னைத் தொழிலாளருக்காக மாகாண காங்கிரஸ் கமிட்டியாரால் கொடுக்கப்பட்ட 30 ஆயிரம் ரூபாயில் மிகுதியாய் இருக்கும் தொகையை நிர்வகிக்க ஸ்ரீமான் கள்ள. வி. இராமசாமி நாயக்கர், டாக்டர் வரதராஜலு, எஸ்.ஸ்ரீநிவாசய்யங்கார், எஸ்.கஸ்தூரிரங்கய்யங்கார், இ. எல் ஐயர், எம்.எஸ். சுப்பிரமணிய ஐயர், செல்வபதி செட்டியார், கோவிந்தராஜலு நாயுடு, ஸ்ரீராமுலு, எ. எஸ். ராமுலு ஆகிய இவர்கள் கூடிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட வேண்டும். இக்கமிட்டியார் சென்னைத் தொழிலாளர் சார்பில் வாங்கியிருக்கும் சொத்துக்களை நிர்வகிக்க வேண்டும்.

2. தொழிலாளர் கிருஷிகர் கட்சியானது சென்னைத் தொழிலாளர்களின் பிரதிநிதியாகமாட்டாது.

3. ஸ்ரீமான் மாரியப்ப நாயகர் இறந்தமைக்காக அன்னார் குடும்பத்தாருக்கு இக்கூட்டத்தார் தங்கள் அநுதாபத்தைத் தெரிவிக்கின்றனர்.

4. ஸ்ரீமான் இ.எல்.ஐயர் தொழிலாளர்மகாநாடுகளில் சென்னைத் தொழிலாளர்களின் பிரதிநிதியாக இருக்கவேண்டும். தொழிலாளருக்காக இவர் செய்த ஊழியங்களை இக்கூட்டத்தார் பாராட்டுகின்றனர்.

## ஜெர்மனியின் நிலை

ஜெர்மனியின் நிலை கவலைக்கிடமானதாகவே இருந்து வருகிறது. உள் நாட்டுக் குழப்பங்களும் உணவுப் பொருள்களின் பஞ்சமும் பெருகிக்கிடக்கின்றன. பிரெஞ்சுக்காரர்கள் தாங்கள் பிடித்த பிடியிலேயே இருக்கிறார்கள். மார்க்கின் நிலையும் மிகவும் பரிதபிக்கத்தக்கதாய் இருக்கிறது. 17-ந் தேதியில் பவுனுக்கு 170 லட்சம் மார்க்குகள் கிடைத்தது. ரூர்பிரதேசத்திலுள்ள பாக்குமேக்கல் எனுமிடத்தில் இம்மாதம் 18-ந் தேதியில் 187 மிலியர்டு மார்குகள் பாங்குக்கு எடுத்துச்செல்லப் படுகையில் பிரேஞ்சுக்காரர்களால் பறிமுதல் செய்யப்பட்டன. குடி அரசு அரசாங்கத்தையும் அவ்வரசாங்க உத்தியோகஸ்தர் ஒருவரையும் தாக்கி எழுதியதற்காக டேயிட்ச் டேச் பிளாட் என்ற பத்திரிகை 15 நாட்களுக்கு நிறுத்தப்பட்டுவிட்டது. புதிய மந்திராலோசனை சபையின் நிலை கவலைக்கிடமானதாகவே இருக்கிறது. இன்னும் இம்மந்திராலோசனைசபை நிலைத்தபாடில்லை. ஜெர்மனியில் துணிகள், பாதரட்சைகள், உணவுப் பொருள்கள் ஆகிய இவைகளின் விலை கணக்கற்ற நிலைக்குப் போய்க் கொண்டிருக்கின்றன. பிரேஞ்சக்காரர்கள் இம்மாதம் 21-ந் தேதியில் பிரிட்டிஷாரின் அறிக்கைக்குத் தங்கள் பதிலை அனுப்பியுள்ளார்கள்.

## டாக்டர் வரதராஜலு

டாக்டர் வரதராஜலு நாயுடுவுக்குச் சிறைச்சாலை டாக்டர் பால் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தும் அது கொடுக்கப்படாமல் போனதால் அன்னார் கடந்த நான்கு தினங்களாய் உண்ணாவிரதம் அநுஷ்டித்து வருகிறார் என்று மதுரையினின்று திரிசிராப்பள்ளி சிறைக்கு மாற்றப்பட்ட ஜனாப் தங்கமீரான் சாயபு ஒருவரிடம் இம்மாதம் 16-ந் தேதியில் கூறினார் என்று தெரியவருகிறது.

டாக்டர் நாயுடு சுவாசகாச நோயால் இதுகாலை வருந்திக்கொண் டிருக்கிறார். டாக்டர் இம்மாதம் 20-ந்தேதியில் மதுரையினின்று திரிசிராப்பள்ளி சிறைக்கு மாற்றப்பட்டார் என்று அறிகிறோம்.

## பம்பாய் நகரசபையும் பசுக்கொலையும்

நகர பரிபாலன சபையின் ஆதிக்கத்திலுள்ள ஆடுமாடுகள் வெட்டுங் கிடங்குகளில் எட்டு வயதுக்குக் குறைவான பசுக்களையும் எருமைகளையும் வெட்ட வொட்டாதவாறு கமிஷனர் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று பம்பாய் நகர சபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

---

தில்லியிலுள்ள லால்கு கடைத் தெருவிலுள்ள ஒரு வீடு இம்மாதம் 19-ந் தேதியில் இடிந்து வீழ்ந்ததினால் ஒன்றிரண்டு பேர் இறந்தும் சிலர் காயமடைந்தும் போய் விட்டார்கள். இவர்களுக்குப் போதிய உதவியை தில்லி ஜன சமுதாய சங்கக் காரியதரிசியான அமீர் உதீனும் தில்லி நகர பரிபாலன சபை உதவி சுகாதார உத்தியோகஸ்தரான டி. எச். சின்னவும் செய்தார்கள்.



Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar (Editor) at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras

